# சூரியனார் கோயில் ஸ்தல வரலாறு



சூரிய பகவான் வழிபாடு, தோஷபரிகாரம்,

மந்திரம் அடங்கியது

சூரிய தலம்

# சூரியனார் கோயில் ஸ்தல வரலாறு

(சூரியன் புராண வரலாறு, வழிபாடு, அடங்கியது



பதிப்பாசிரியர்

விஜய் சர்மா

ஜெயம் பதிப்பகம்



A/3, வந்தியன் மாளிகை,

70, எல்லையம்மன் கோயில் தெரு,

மேற்கு மாம்பலம், சென்னை - 33

போன் : 2489 7825

விலை ரூ. 10/-

# சூரியனார் கோயில்

## *சூரியதேவன் வணக்கம்*

காசினி இருளை நீக்கும் கதிரொளியாகி எங்கும்
பூசனை உடகம் போற்றப் புசிப்பொடு சுகத்தை நல்கும்
வாசியேழுடைய தேர்மேல் மகாகிரி வலமாய் வந்த
தேசிகா எனை ரட்சிப்பாய் செங்கதிரவனே போற்றி

### *சூரியா போற்றி*

சிம்ஹ அதிபதி சூரியா போற்றி
மேஷத்து உச்ச சூரியா போற்றி
தந்தை காரக சூரியா போற்றி
வளமதி வழங்கும் சூரியா போற்றி 1

அரசு உதவி சூரியா போற்றி
புகழ் மேலோங்க சூரியா போற்றி
தொழில் முன்னேற சூரியா போற்றி
உளம் வளமாக சூரியா போற்றி 2

புலமை சிறந்திட சூரியா போற்றி
புவனம் போற்றிட சூரியா போற்றி
செல்வச் செழிப்பே சூரியா போற்றி
சுடரொளி அறிவே சூரியா போற்றி 3

# சூரிய வழிபாடு

*ரிக்வேதம் மிகவும் தொன்மையானது. சுமார் நான்காயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்தே பாரதத்தில் சூரிய வழிபாடு நடைபெற்று வருகிறது என்பதற்கு ரிக் வேதத்தில் குறிப்பு உள்ளது.*

*தொல்காப்பியம் மிகவும் பழமையான தமிழ் நூல் ஆகும். இதில்*

"கொடிநிலை கந்தழி வள்ளி என்ற
வடு நீங்கு சிறப்பின் முதலன மூன்றும்
கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே"

என்ற சூத்திரம் வருகிறது இதில் வருகின்ற **கொடிநிலை** என்பதற்குக் 'கீழ்த்திசைக் கண்ணே நிலை பெற்றுத் தோன்றும் வெஞ்சுடர் மண்டலம்' என்று பொருள் எழுதப்பட்டுள்ளது. இதிலிருந்து சூரியக் கடவுள் கொடி நிலை என்ற பெயரில் தொல் காப்பியத்தில் குறிக்கப் பெற்றிருக்கிறது.

**சிலப்பதிகாரத்தில்**

சங்க இலக்கியங்களில் சிறப்பாகக் கருதப்படும் காவியம் சிலப்பதிகாரம். இக்காவியத்தில் கனாத்திறம் உரைத்த காதையில் சூரியன் கோயில் **"உச்ச கிழான் கோட்டம்"** என்ற பெயரால் குறிக்கப்படுகிறது. மேலும் இந்தக் காதையில் சோமகுண்டம், சூரிய குண்டம் என்ற இரு குளங்கள் சந்திரன் பேராலும் சூரியன் பேராலும் இருந்ததும் தெரிவிக்கப்படுகின்றன.

**மற்றும் சிலப்பதிகார மங்கல வாழ்த்துப் பாடலில்-**

**"ஞாயிறு போற்றுதும் ஞாயிறுபோற்றுதும்**
**காவிரி நாடன் திகிரி போல் பொற் கோட்டு**
**மேரு வலம் திரிதலான்"**

என்ற சூரிய வணக்கம் சொல்லப்படுகிறது ஆதலால் பாரதத்திலும், குறிப்பாகத் தமிழ்நாட்டிலும் சூரியனுக்குக் கோயிலும் சூரிய வழிபாடும் இருந்ததெனத் தெரிந்து கொள்கிறோம்.

**சாட்சியான சூரியன் :**

கண்ணகியின் காற்சிம்பை விற்க மதுரை வீதியில் சென்ற கோவலன், பொற் கொல்லனின் சூழ்ச்சியால் கள்வனாகச் குற்றம் சாட்டப்பட்டு ஆராய்ச்சி அறிவற்ற மன்னனது ஆணையால் இறந்து பட அது கேட்டு அடியற்ற மரம் போலத் தரை வீழ்ந்த கண்ணகி மெய்யிற் பொடியும் விரித்த கருங்குழலும், கரம்தனில் சிலம்பும் கண்ணீரும் கொண்டு கதிரவனை நோக்கி, "காய் கதிர்ச் செல்வனே நீ சொல். என் கணவன் கள்வனோ ?" என

அதற்கு ஆதவன், ''கள்வனோ அல்லன் கருங்கயற்கண் மாதராய் உள்ளெரி உண்ணும் இவ்வூர்'' என்றனன் அசரீரியாக.

எனவே இம் மண்ணுலகில் நிகழும் குற்றங்களையும் அநீதிகளையும் உலகிற்குச் சூரியன் சொல்லி நின்றனன் என்று சிலம்பு கூறும்

**பாரதத்தில் :**

பாரதத்தில் செந்தாமரைக் கண்ணபிரான், என்றும் சிரஞ்சீவியும் ஒப்பற்ற பெரு வீரனும் துரோணரின் மகனுமான அசுவத்தாமனுக்கு படைத் தலைமையினைத் துரியோதனன் தந்து விட்டால் பாண்டவர்க்கு வெற்றி வாய்ப்பில்லை என்பதை உணர்ந்து துரியனின் அவையிலிருந்து அசுவத்தாமனை வெளியே கூப்பிட்டார் அவனும் வந்தான்.

அவன் வருகையை உணர்ந்தும் உணராதது போலத் தன் கைக் கணையாழியைத் தரையிலே நழுவச் செய்ய, அதை அசுவத்தாமா கையில் எடுத்துக் கண்ணனிடம் நீட்ட அதை உணராதவர் போல் ஆகாயத்தைச் சுட்டிக் காட்டி ''அசுவத்தாமா ! ஆகாயத்தைப் பார்த்தாயா ? சூரியனைச் சுற்றி ஊர்கோள் பரிவட்டம் அமைந்துள்ளதை !'' என்றார்.

அவனும் ஆதவனைப் பார்த்து வியந்து விட்டு கையில் எடுத்திருந்த மோதிரத்தைக் கண்ணனிடம் நீட்டினான். இதனைத் துரியோதனன் கண்டான். பூமி தேவியும் வானில் உள்ள சூரிய பகவானும் சாட்சியாக அசுவத்தாமன் மோதிரத்தைத் தொட்டுச் சத்தியம் செய்து கொடுத்தான் என எண்ணினான் என்றும் வில்லிப்புத்தூரார் கண்ணனின் மித்திர பேதத்தை எடுத்துக் காட்டுவர். இதன் மூலம் சூரியனைச் சாட்சி வைத்து சத்தியம் செய்யும் பழக்கம் அக்காலத்தில் இருந்தது என்பதைப் புலப்படுத்துகிறார்.

அந்த நாளில் சூரியனின் நகர்ச்சியைக் கொண்டு நேரம் அறியும் பழக்கம் இருந்தது. ஒரு நாளில் பகலின் 12 மணி நேரத்தை 8 விற்கிடைகளாகப் பிரித்திருந்தனர் என்பதையும் வில்லிபுத்தூரார் மூலம் அறிகிறோம். பாரதப்போரின் பதினேழாவது நாள் சூரிய குமாரனான கண்ணனின் திரேகத்தைப் பார்த்திபனின் கணைகள் சல்லடைக் கண்களாகத் துளைத்து விட்ட போதிலும் கர்ணன் செய்த புண்ணியத்தால் அவனது உயிர் பிரியவில்லை. இந்நிலையில் கண்ணன் வானத்தை நோக்கினான்.

சூரியன் மறைவதற்கு இரண்டுவிற்கிடைப் பொழுதே அதாவது 3 மணி நேரமே (ஒருவிற்கிடைப் பொழுது $1^1/_2$ மணி நேரம்) இருந்தது. உடனே கண்ணன் அர்ச்சுனனைப் போரைச் சற்று நிறுத்துமாறு கூறத் தந்திரமாக வேதியன் வடிவத்தில் கர்ணனை அடைந்து அவன் புண்ணியங்கள் அனைத்தும் தானமாகப் பெற்றார். கர்ணனின் உயிரும் பிரிந்தது. இதனை வில்லிபுத்தூரார் -

**"அத்தவெற்பு இரண்டுவிற்கிடை எனப்போய்**
**ஆதவன் சாய்தல் கண்டருளி**
**முத்தருக்கெல்லாம் மூலமாய் வேத**
**முதற் கொழுந்தாகிய முதல்வன்**
**சித்திரச் சிலைக்கை விசயனைச் செரு நீ**
**ஒழிகெனத் தேர்மிசை நிறுத்தி**
**மெய்த்தவப் படிவ வேதியனாகி**
**வெயிலவன் புதல்வனை அடைந்தான்"** என

விளக்குவார்.

இதிலிருந்து ஆதவனுடைய ஸ்தானத்தை அடிப்படையாகக் கொண்டு மணியைக் கணக்கிடும் வழக்கம் அக்காலத்தில் இருந்தது என்பதை அறிகிறோம்.

**ஆதவன் குலம் :**

ஆதவன் குலத்தில் தோன்றிய பகீரதன் என்ற மன்னனே தவ வலிமையால் ஆகாய கங்கையை வர

வழைத்தான். அதன் வேகத்தை அடக்கத் தவ வலிமையால் சிவபெருமானையே அக் கங்கையை அணியச் செய்தவன்.

ஸ்ரீராமசந்திரமூர்த்தியும் சூர்ய குலத் தோன்றலே. இன்னும் சிபிச் சக்ரவர்த்தி போன்ற பேரரசர்களும் சூரிய குலத்தோரே !

வான் பொய்ப்பினும் தான் பொய்யா வளமுடைக் காவிரி புரக்கும் சோழ மண்டல அரசர்களும் சூரிய குலத் தோன்றல்களே ! அவர்களில் முதல் குலோத்துங்க சோழனும் ஒருவன். இச்சோழ மன்னன் கவிச் சக்ரவர்த்தி கம்பர், ஒட்டக் கூத்தர், புகழேந்தி காலத்தவராதல் கூடும் என்பர்.

**விஞ்ஞானத்தில் சூரியன் (The Sun)**

உலக உயிர்த் தோற்றங்களுக்கு முதன்மையானவன். நவக்கிரகங்களின் தலைமை நாயகன். உலக உயிர்களின் ஆத்மாவாகவும், எலும்பாகவும், பிதாவாகவும், அமைபவன் ஆதவனே ! இக்கருத்து உலகம் முழுவதும் ஒப்புக் கொள்ளப்பட்ட ஒன்று ஆகும். வாரத்தில் முதல் நாளே ஞாயிறு என்று தமிழர் கொள்கிறோம். Sunday என்று மேல் நாட்டினரும், ஆதிவாரம் என ஆந்திரரும் கூறுகின்றனர்.

அண்டத்தில் ஒரு ஒளிப்பிழம்பாய் ஆதவன் தோன்றினான். பல காலம் முன்பு, நீண்ட ஒளிப் பிழம்பாயிருந்த சூரியனிடமிருந்து வந்த குழம்புப் பொருள்கள், நாளா வட்டத்தில் குளிர்ந்த உருண்டை வடிவம் பெற்றுப் பல கிரகங்களாக மாறின. அவை தன்னைத் தானே சுற்றிக் கொண்டு சூரியனின் ஈர்ப்பு விசையால் ஈர்க்கப்பட்டு சூரியனையும் சுற்றி வருகின்றன.

அவை சூரிய குடும்பமாகி விட்டன. அச்சூரிய குடும்பத்தில் புதன், சுக்கிரன், பூமி, செவ்வாய், வியாழன்,

சனி, யுரேனஸ், நெப்டியூன், ப்ளூட்டோ என்று ஒன்பது கிரகங்கள் உள்ளன.

சூரியன் நடுத்தர வகை நட்சத்திரம் அது இன்னும் நெருப்புப் பிழம்பாகவே இருந்து, எண்ணிப் பார்க்க இயலாத அளவுக்கு வெப்பமாக உள்ளது. மேற்பரப்பில் மிகுதியான பிரகாசம் மிகுந்த ஒளி மண்டலம் உள்ளது. மற்ற கிரகங்கள் அந்த ஒளியையே பிரதிபலிக்கின்றன.

**சூரியனின் அளவும் பரிமாணமும் :**

சூரியன் பூமியிலிருந்து 15 கோடி கி. மீட்டர் தூரத்தில் இருப்பதாக விஞ்ஞானிகள் ஆராய்ந்திருக்கின்றனர். ஆதவன் தன்னைத்தானே சுற்றிக் கொள்ள 25 நாட்கள் 9 மணி 7 நிமிடங்கள் ஆகின்றன.

சூரியன், பூமியின் குறுக்களவு போல் 109 மடங்கு குறுக்களவு கொண்டதாகும். அதன் குறுக்களவு, அல்லது விட்டம், 13,91,980 கி. மீட்டர் ஆகும். பூமி சூரியனைச் சுற்றி வர $365^1/_4$ நாட்கள் பிடிக்கின்றன. சூரியனிடமிருந்து வெப்பமும் ஒளியும் பெற்றுத்தான் உலகில் உயிரினங்கள் தோன்றுகின்றன.

**தானம் தவம் இரண்டும் தங்கா வியன் உலகம்**
**வானம் வழங்காது எனின்**

அதாவது - மழை பெய்யாவிடில் இப் பரந்த உலகில் தானம் தவம் இரண்டும் நிலைபெறாது என்றார் வள்ளுவர்.

மழையைப் பெய்விப்பனும் சூரியனே. சூரிய ஒளியிலேயே தாவரங்கள் உணவு தயாரிக்கின்றன. அந்த உணவே மற்ற உயிரின் உயிர் வாழ்க்கைக்கும் அடிப்படையாக அமைகின்றது. காற்று வீசுதலுக்குக் கதிரவனே காரணமானவன்.

சூரிய கோளம் 440 பூமியின் அளவு கொண்டது. சூரியனிடமிருந்து ஒளி பூமியை அடைய $8^1/_2$ நிமிடங்கள்

ஆகின்றன. சூரியனின் எடை பூமியைக் காட்டிலும் 3,30,000 மடங்கு உள்ளதாகும் எனில் பார்த்துக் கொள்ளுங்களேன் !

சூரியனின் வெப்ப நிலை 11,000 முதல் 22,000 வரை இருக்கிறது. சூரிய ஒளி ஒரு நொடிக்கு 29,76,000 கி. மீ வேகத்தில் பூமியை நோக்கிப் பாய்கிறது.

சூரியன் இல்லையேல் பூமியில் ஒன்றுமேயில்லை. இருட்டில் உலகம் மூழ்கியிருக்கும். மழையில்லை. காற்றில்லை, நீரில்லை - என்றால் உயிரினம் வாழ்வது எப்படி ?

சூரியன் கிரகங்களைத் தன் ஈர்ப்பு விசையால் ஈர்த்து அவற்றை இயங்கச் செய்து நமக்கு வாழ்வையும் வளத்தையும் தருகின்றது.

பூமியில் கடக ரேகைக்கும் மகர ரேகைக்கும் மத்தியில் சூரியன் வடக்கு நோக்கியும் தன் பயணத்தைச் செய்கின்றது. அவ்வாறு வடக்கு நோக்கிப் போகும் போது உத்தராயணம் என்றும் தெற்கு நோக்கிப் பயணிக்கும் போது தட்சிணாயனம் என்றும் அழைப்பார்கள்.

பூமி தன் அச்சில 23$^{1}/_{2}$ டிகிரி சாய்ந்து சூரியனைச் சுற்றி வருவதால் பருவ காலங்கள் ஏற்படுகின்றன. பருவ காலங்கள் பயிர்கள் செடி கொடிகளை வளர்க்கின்றன.

**சூரிய கிரஹணம்**

பூமி சுற்றி வரும் போது சந்திரன் சூரியனுக்கும், பூமிக்கும் இடையே வரும். இவை மூன்றும் ஒரே நேர் கோட்டில் அமையும் போது சூரியனைச் சந்திரன் மறைத்திடும் இதுவே சூரிய கிரஹணம் ஆகும். சூரிய கிரஹணம் வருடத்தில் இரண்டு முறை ஏற்படும்

**சந்திர கிரஹணம் !**

அது போல் சூரியன், பூமி, சந்திரன் ஆகிய மூன்றும் நேர் கோட்டில் வரும் போது சூரியனுக்கும் சந்திரனுக்கும் இடையே பூமி வரும். அப்போது பூமியின் நிழலானது சந்திரன் மீது வீழ்ந்து மதியின் பிரகாசத்தைக் குறைக்கும் இதுவே சந்திரகிரஹணம் ஆகும்.

சூரிய குடும்பத்தில் உள்ள எல்லாக் கிரஹங்களின் கூட்டு எடையானது சூரியனின் எடையில் ஆயிரத்தில் ஒரு பங்கு ஆகும்.

சூரியனை எல்லா கிரஹங்களும் சுற்றி வருகின்றன என்ற உண்மையைக் கண்டு பிடித்தவர் கோபர்னிகஸ் என்ற இத்தாலிய விஞ்ஞானி ஆவார்.

**சூரியன் கூறும் ஜோதிடம் :**

சூரியனுக்கு 'மித்ரன்' 'ஆத்மகாரகன்' 'ரக்ஷகன்' என்றெல்லாம் (ஜோதிட அடிப்படையில்) பெயர்கள் உண்டு. சகல போக பாக்யங்களையும், அதிர்ஷ்டத்தையும் அள்ளிக் கொடுத்து ரக்ஷிப்பதால் ரக்ஷகன் என்ற பெயர் உண்டு.

உள்ளங்கையில் சூரியமேட்டில் உள்ள ரேகையை அதிர்ஷ்ட ரேகை என்கின்றனர்.

வெற்றியின் சின்னமாகக் கருதும் 10 என்ற எண்ணில் (மகர ராசி 10 ஆம் வீடு) தை மாதம் சுக்லபக்ஷ சப்தமி அன்று (ரத சப்தமி) சூரியனை வழிபாடு செய்கிறோம்.

சூரியன் ஏழு நிறங்களைத் தன்னுள் அடக்கிக் கொண்டு ஏழு விதமான சக்திகளையும் இயக்கங்களையும் நடத்துகின்றான்.

இந்த ஏழு என்ற எண்ணை மேல் நாட்டு எண்குறி சாஸ்த்ர மேதையான ஷீரோ 'ஸ்பிரிச்சுவல் ஸெவன்' என்று குறிப்பிடுகிறார். உதாரணமாக 7 நாட்கள் 52

வாரங்கள் (5+2=7) சப்த ரிஷிகள், சப்த மாதர்கள், சப்த நிறங்கள் முதலியன.

ஸகல கிரஹங்களுக்கும், நக்ஷத்திரங்களுக்கும் அதிபதி ஆதவன். நம் தந்தையின் வாழ்க்கை நமது ஆத்ம பலம், ஆற்றல், செல்வாக்கு இவைகளுக்கு அதிபதியாகிறான்.

ஜோதிடம் என்பது தெய்வீகக்கலை என்று கூறலாம். நமது வாழ்க்கையையும் உடலையும் நடத்திச் செல்லும் ஒன்பது கிரஹங்களைப் பற்றியும் தெளிவாக எடுத்துரைக்கும் விஞ்ஞானம் எனலாம். இதை மேல் நாட்டினரும் ஒப்புக் கொள்கின்றனர். இதனில் பரிச்சயமற்றவர்கள் அல்லது இதனை ஆராயாதவர்கள் மூட நம்பிக்கை என்று கூறலாம்.

ஒன்பது கிரஹங்களில் தலைமை ஸ்தானம் வகிப்பவர் சூரியன் என்று கூறலாம் கோள்களையும், பிரபஞ்சத்தையும் ஆட்சி புரிகிறார். சுப கிரஹம் இவர், சாத்விக குணமுடையவர்.

ஒருவரது ஜாதகத்தில் சூரியன், ஒருவரது தந்தை, ஆத்மா, தலை, சரீரம் வலது கண், பித்தம், பைத்தியம், உத்தியோகம், ஜுரம், உடல் நலம், ஆட்சித்திறம், யாத்திரை, தைர்யம், புகழ், ஆகியவற்றிற்குக் காரணமானவர் என்று ஜோதிடம் கூறுகிறது.

சூரியன் சிம்ம ராசிக்கு அதிபதி. மாதம் ஒரு ராசி வீதம் 12 ராசிகளும் 12 மாதங்கள் சஞ்சாரம் செய்கின்றனர்.

ஒவ்வொரு தமிழ் மாதமும் முதல் தேதியன்று சூரியன் அடுத்த ராசிக்குச் செல்கின்றான். இதுவே சூரியனின் கோட்ச்சாரம் எனப்படும்.

ஒன்பது கிரகங்களும் ஜாதகத்தில் ஏதாவது ஒரு வீட்டில் பரவலாக இருக்கும். கிரஹங்கள் எந்த வீட்டில்

இருக்கிறதோ அதற்குத் தகுந்தாற் போல் நன்மை தீமைகள் வாழ்நாளில் ஏற்படும்.

ஒவ்வாரு கிரஹமும் தனக்கென்று விதிக்கப்பட்ட வேறு வீட்டையும் பார்க்கும் அவ்வாறு பார்ப்பதால் அந்த கிரஹத்தின் தொடர்பும் அவ்வீட்டுக்கு ஏற்படுவதால் அக்கிரகம் செய்யும் நன்மை தீமை கலந்து உண்டாகும்.

சூரியன் செல்லும் பாதையை குறிப்பாகக் கொண்டே ஜாதகம் கணிக்கப்படுகிறது. மற்ற கிரஹங்களும் அதே பாதையில் சஞ்சரித்து வருகின்றன. இப்பாதையை **'சோடியாக்'** என்ற பெயரில் 12 ராசிகளாகப் பிரித்திருக்கின்றனர். இவையே ராசிகள் ஆகும்.

எல்லாக் கிரஹங்களும் தான் இருக்கும் வீட்டிலிருந்து ஏழாம் வீட்டைப் பார்க்கும் செவ்வாய் 4,8, வீடுகளையும் குரு 5,9, வீடுகளையும் சனி 3,10 ஆம் வீட்டையும் பார்த்திடும்.

சூரியன் பிதாகாரகன். மேஷத்திலும் சிம்மத்திலும் இவருக்கு சக்தி அதிகம். துலா ராசியில் இவருக்கு பலம் குறைவு. உயிர், உத்தியோகம், தன்னம்பிக்கையைத் தருபவர் எனலாம்.

ஒருவரின் ஜாதகப்படி சூரியன் இருக்கும் ராசியை வைத்துப் பலன்கள் கூறுகிறார்கள். சூரியன் கோட்சாரத்தில் சுற்றி வரும்போது ராசிக்கு ஏற்றபடி பலன் நமக்கு உண்டாகும்.

சூரியனின் பலம் ஜாதகத்தில் ஒருவர் பெற்றிருந்தால் அந்த ஜாதகர் வாழ்க்கையில் சௌபாக்யங்கள் அமையப் பெறுவார்.

**சூரியனால் ஏற்படக்கூடிய நோய்கள் :**

கண் பார்வை மங்கல், எலும்புகள் பலம் இழப்பு,

பித்த நோய், காய்ச்சல் இருதயத்துடிப்பு, தலைவலி இரத்த சோகை, முன் கோபம், மஞ்சள் காமாலை.

சூரிய வழிபாட்டால் இவற்றைப் போக்கலாம்.

**சூரிய தசை**

சூரிய தசை ஆறு வருடங்களாகும்.

மேஷராசியில் $1^1/_4$ பங்கு ஆற்றலும், சிம்ம ராசியில் 1 பங்கு ஆற்றலும் கடகம் விருச்சிகம் மிதுனம், கன்யா, ராசிகளில் 1/2 பங்கு ஆற்றலும் மகரம் கும்பம் ராசிகளில் 1/4 பங்கும் துலா ராசியில் 1/8 பங்கும் ஆற்றல் உண்டு.

சூரியன் தரும் பலன்களை சித்திரை, ஆவணி மாதங்களிலும், கார்த்திகை, உத்திரம், உத்ராட நட்சத்திரங்களில் சூரியன் வரும் போதும் உணரலாம்.

**சுப பலன் :** தந்தையால் நல்ல அனுகூலம், தைரியம், வீரம், பராக்கிரமம், சரீர ஆரோக்கியம் தேஜஸ் அதிகரிக்கும். பட்டம் பதவிகளும் தேடி வரும்.

**அசுப பலன் :** பிதுர் கண்டம், பிதுர் விரோதம் உஷ்ண சம்பந்தமான வியாதிகள், மனைவி பிள்ளைகளே விரோதியாகக் கூடுதல், பயம், மனக்கவலை முதலியன ஏற்படும்.

**நிற்கும் இடங்கள் :**

ஜாதகத்தில் சூரியன் 3,6,10,11, இடங்களில் நின்றிருந்தால் நற்பலன்கள் உண்டாகும்.

நீசம் பெற்று 3,6,8,12 - ல் மறைவு பெற்று சூரிய தசை நடந்தால் தீ, தீய பலன்கள் உண்டாகும்.

சூரியன் புதன் ராகுவுடன் சேர்ந்தால் பட்டப் படிப்பு படிப்பாராம். சூரியனுக்கு இரண்டாம் வீட்டில் சந்திரன் இல்லாது மற்ற சுபக்கிரகங்கள் காணப்படின் வாழ்வில் புகழ், க்யாதி, அதிர்ஷ்டம் புரியும் திறம் போல் இருப்பின் சிறப்பான பலன்கள் ஏற்படும்.

சூரியன் சிவபெருமானின் முக்கண்களில் வலக் கணணாக இருப்பவர் என்று அறிஞர்கள் கூறுகின்றனர்.

சூரிய தசைக்குப் பரிகாரம் பின்னால் சொல்லப்படுகிறது.

**சூரிய தேவன் புராண வரலாறு**

மகாவிஷ்ணு தம் உந்திக் கமலத்திலிருந்து பிரம்மாவைப் படைத்தார். திருமாலின் ஆணைப்படி நான்முகன் அண்டத்தைத் தோற்றுவித்தார். அண்டம் ஒரே இருள் சூழ்ந்திருக்க, ஓம் என்ற ஒலி பிறந்தது. அவ்வொளியிலிருந்து சூரியன் தோன்றினான். என்று மார்க்கண்டேய புராணம் கூறுகிறது.

பிரம்மா தன் படைப்புத் தொழிலுக்குத் துணை புரிய சப்த ரிஷிகளை உண்டாக்கினார். அவர்களில் ஒருவர் மரீசி என்ற முனிவர். அவருக்கு மகனாக உதித்தவர் காசியபர் என்ற முனிவர் காசியபர் 13 மனைவிகளை மணந்தார். அவர்களில் மூத்த மனைவி பெயர் அதிதி. அவள் மகனே சூரியன் என்று கூறப்படுகிறது.

உலகை ரக்ஷிக்கும் பொருட்டு நவக்கிரஹக் குழு அமைக்கப்பட்டு, சூரியனுக்குத் தலைமைப் பதவி தரப்பட்டது.

ஏழு குதிரைகள் பூட்டப்பட்ட ஒரு சக்கரமுள்ள ரதத்தில் சூரியன் மேரு மலையைச் சுற்றி வலம் வருகின்றார். அவருக்குச் சாரதி அருணன் ஆவான்.

சூரியனுக்கு சமுங்கை, பிரபை, ரைவத இளவரசி, சாயா தேவி ஆகிய நான்கு மனைவிகள் ஆவார்கள்.

சூரியனுடைய மகன்கள் வைவஸ்தமனு, யமன், அசுவினி தேவர்கள், பிரதவன், ரைவ வஸ்தன் யமுனை என்ற மகளுமுண்டு.

சமுங்கை என்ற உஷாதேவி சூரியனின் வெப்பம் தாங்கவொண்ணாமல் தவித்தாள். அதனால் தன் நிழலையே ஒரு பெண்ணாகப் படைத்து, தன் சாயலைப் போன்றிருந்த படியால் சாயா தேவி என்று பெயருமிட்டாள். தனக்குப் பதிலாக சூரியனுடன்

வாழும்படியும், இந்த ரகசியத்தை வெளியில் சொல்ல வேண்டாமென்று கூறிவிட்டு வட துருவத்தில் தவம் செய்யச் சென்று விட்டாள்.

சாயா தேவி, சூரியன் தாம்பத்தியத்தில் சாவர்ணி மனு, சனி, பத்திரை என்ற மூவர் பிறந்தார்கள்.

இவர்கள் பிறப்பிற்குப் பிறகு யமன், சாயா தேவி தன் மாற்றாந்தாய் என்பதைக் கண்டு கொண்டான். இதனைத் தன் தந்தையான சூரியனிடம் கூறினான் யமன்.

சூரியன் உஷாதேவியைக் கண்டு பிடித்துக் கொண்டு வந்து அவளுடன் வாழ ஆரம்பித்தான்.

சூரியன் மும்மூர்த்திகளின் அம்சமாவான் என்பர். அட்டதிக் பாலகர்களில் சூரியனும் ஒருவன்.

பிருகு முனிவர், வால்மீகி முனிவர், அகத்தியர், வசிஷ்டர், ஆகியோர் சூரியனின் மக்கள் என்று கூறுவார்கள்.

கர்ணன், சுக்ரீவன் என்பவர்கள் சூரிய தேவனின் அருளால் பிறந்தவர்கள் என்று ராமாயணமும், மகா பாரதமும் மொழிகின்றன. வேதத்திற்கு சூரியனே முதல்வன் என்பர்.

சுவர்ணபானு என்ற ஒரு அசுரன் இருந்தான். அவன் திருமாலை ஏமாற்றி அமுதம் பெற்று உண்டு விட்டான் சூரிய தேவன் அவனே பிடித்துக் கொடுத்தார். அதனால் திருமாலிடம் அடிபட்ட சுவர்ணபானு, ராகு, கேது ஆகிய பாம்பாக மாறி விட்டான்.

**ஸ்தல வரலாறு :**

முன்னொரு காலத்தில் இமயமலைச் சாரலில் பல முனிவர்கள் தவம் செய்து வந்தனர்.

அவர்கள் காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியம் என்ற ஆறு குற்றங்களை நீக்கியவர்களாய், மெய், வாய், கண், மூக்கு, செவி, ஆகிய

ஐம்புலன்களையும் அடக்கி, நான் அந்த கரணங்களில் சித்தத்தில் மேம்பட்டவர்களாக ஒளிர்ந்தார்கள்.

அவர்கள் மும்மூர்த்திகளை வழிபட்டு, நான்கு வேதம், ஆறு சாத்திரம், பதினெட்டு புராணம், இருபத்தெட்டு ஆகமம், ஆறுபத்து நான்கு கலைகள், தொண்ணூற்றாறு தத்துவம் ஆகியவற்றை ஆராய்ந்து வாழும் இயல்புடையவர்களாக இருந்தார்கள்.

**காலவ முனிவர் :**

இவர்களில் காலவ முனிவர் என்ற ஒருவர் இருந்தார். அவர் முக்காலத்தையும் அறிந்தவர். இதனால் இவரிடம் சில முனிவர்கள் வருவார்கள். இவர்கள் தங்கள் வருங்காலத்தை அறிந்து செல்வதை வழக்கமாகக் கொண்டிருந்தார்கள்.

ஒருநாள் முனிவரிடம் ஒரு இளந்துறவி வ்ந்தார்.

அவர் தனது வருங்காலத்தைத் தெரிவிக்கும்படி கேட்டார்.

காலவ முனிவர் தமது ஞான த்ருஷ்டியால் இளந்துறவியின் வருங்காலத்தை ஆராய்ந்தார்

கடைசியாக, ''உமது வருங்காலம் பற்றிக் கூற எதுவும் இல்லை !'' என்றார்.

அப்பொழுது அந்த இளந்துறவி, காலவ முனிவரைப் பார்த்து, '' முனி புங்கவரே ! எல்லோருடைய வருங் காலத்தைப் பற்றியும் சொல்லுகின்றீர்கள் ! ஆனால், நீங்கள் உங்களுடைய வருங்காலத்தைப் பற்றி தெரிந்ததுண்டா ? என்று கேட்டு சிரித்தார்.

உடனே ஆச்சர்யப்பட்டு காலவ முனிவர், இளந் துறவியைப் பார்த்து '' நீ யாரப்பா'' இவ்வளவு துணிச்சலாக இதுவரை என்னிடம் யாருமே கேட்டதில்லையே ! நீயார் ? என்று கேட்டார்.

இளந்துறவி ''என்னைத் தெரியவில்லையா ? நான்தான் காலதேவன் !'' என்று கூறி மறைந்து விட்டார்.

**முனிவரின் சிந்தனை :**

காலவ முனிவர் யோசிக்கத் தொடங்கினார். தம் வருங்காலத்தை எண்ணமிட்டார். தம்முடைய முன் ஜென்ம வினைகளால், முன் ஜென்மத்தில் செய்த பாவத்தால் தமக்குத் தொழுநோய் வரப்போகிறது என்பதை உணர்ந்தார். மனம் மிகவும் கலங்கி, முகம் வாட்டமுற்றார்.

காலவ முனிவரின் முகத்தில் பிரதிபலிக்கும் சோகத்தைக் கண்டு, அவருடைய சோகத்திற்குக் காரணம் என்ன என்பதை விசாரித்தார்கள்..

காலவ முனிவர் தமது வருங்காலத்தில் நிகழப்போவதை எடுத்துக் கூறினார்.

அதனைக்கேட்ட மற்ற முனிவர்கள், ''காலவரே ! முக்காலமும் அறிந்திட்ட மூதறிஞரே ! நிகழ்வன நிகழ்ந்தே தீரும். அதனை அகற்ற வழி காணாமல் வருத்தமுறலாமா முன் வினைப்பயனை அளிப்பவர்கள் நவக்ரஹங்கள் நவக்ரஹங்களை நோக்கி தவமிருந்து தாங்கள் செய்த முன் வினைகளிலிருந்து விடுதலை அடைய வேண்டுவன செய்யும் !'' என்று தேற்றினர்.

**கடுந்தவம் :**

காலவமுனிவர் மேற்கொண்டு இமய மலையில் இருக்க மனம் கொள்ளவில்லை. எனவே விந்திய மலைச் சாரலுக்கு வந்தார். ஒரு நல்ல நாள் பார்த்து பஞ்சாக்னி வளர்த்தார் அதன் மத்தியில் இருந்து நவக்கிரகங்களை எண்ணி, தியானம் புரிந்து கடுந்தவம் ஆற்றினார்.

தவம் முதிர்ந்தது. முதிர முதிர தவத்தின் அக்னி ஜ்வாலை நவக்கிரக மண்டலத்தைத் தாக்கியது.

ஜ்வாலையின் வெம்மையை நவக்ரஹங்கள் உணர்ந்தார்கள். தம்மை நோக்கித் தவம் புரியும் காலவ முனிவரின் முன் நவ நாயகர்கள் ஒன்று சேர்ந்து காட்சி கொடுத்தார்கள். காலவ முனிவர் அக்கினியிலிருந்து வெளியே வந்தார். நவ நாயகர்களின் பாதம் வீழ்ந்து பணிந்தார் பின்பு எழுந்து நின்று கரங்களை சிரம் மேல் கூப்பி நின்று துதித்தார். கால முனிவரின் ஆழ்ந்த பக்தியினை கண்டு சந்தோஷித்த நவக்கிரஹ நாயகர்கள், "முனிவரே உம் தவத்தைக் கண்டு களித்தோம். உமக்கு யாது வரம் வேண்டும்?" என்று கேட்டார்கள்.

"நவ நாயகர்களே ! வினைப் பயன் தரும் தேவர்களே! என்னைத் தொழு நோய் பற்றும் காலம் வந்து கொண்டிருக்கிறது ! அந்தக் கடும் தொழு நோய் பற்றாமல் இருக்க வரம் தந்தருள வேண்டும்' ! என்று கேட்டுக் கொண்டார்.

நவ நாயகர்களும், "அப்படியே ஆகட்டும் !" என்று வரம் தந்து மறைந்தார்கள்.

**பிரம்ம தேவரின் சினம் :**

நவகோள்கள் இறைவன் ஆக்ஞைப்படி இயங்கவே அதிகாரம் கொண்டிருந்தனர். அவர்கள் சுயமாக வரம் தரும் அதிகாரம் பெற்றிலர்

இச் செய்தியினை பிரம்ம தேவர் அறிந்து சினம் கொண்டு நவக்கிரஹ நாயகர்களைத் தம்மிடம் வரவழைத்தார்.

பிரம்ம தேவர் அவர்களைப் பார்த்து, "நவ கோள்களே! நீங்கள் தேவர்கள்தான். என்றாலும் எம் கட்டளைப்படியே இயங்கக் கட்டுப்பட்டவர்களாவீர். சுதந்திரமாகச் செயல்பட உங்களுக்கு உரிமை இல்லை. சிவபெருமான் ஆக்ஞைப்படியும் காலதேவனின் துணைப்படியும் அனைத்து உயிர்களுக்கும் அவரவர் வினைப் பயனை ஊட்டுவதற்காகவே உம்மைப்

படைத்தோம் ஆனால் நீங்கள் எம் ஆக்ஞைக்கு உட்படாது நடக்கத் துணிந்தீர். காலவ முனிவருக்கு தொழுநோய் பீடிக்காமலிருக்க வரம் தந்தீர். ஆதலால் தாங்கள் மண்ணுலகில் பிறந்து காலவ முனிவர் தொழு நோயுற்று வருந்தும் காலம் வரை நீங்கள் அத் தொழு நோயால் துயர்படுவீராக ! என்று சாபமிட்டார்.

சாபமடைந்த நவ கோள்கள், அதிர்ச்சியடைந்தனர். உள்ளம் பதைத்தனர் பிரம்மதேவரின் பாத கமலங்களில் வீழ்ந்து பணிந்தனர்.

''சிருஷ்டி கர்த்தாவே ! தாங்கள் சினம் தவிர்த்து எங்களை மன்னித்திட வேண்டும். எங்கள் செயலுக்குக் காரணம் உண்டு. காலவ முனிவரின் தவத்தின் ஜ்வாலை எங்களை அடைந்து சுட்டெரிக்கத் துவங்கியது. அதனால் அவர் முன் தோன்றி, அவர் மீது இரக்கம் கொண்டு அவர் கேட்ட வரத்தை அளித்து விட்டோம். அறியாமற் செய்த தவறு இது. அதனால் பிழை பொறுத்து எங்களுக்கு சாப விமோசனமருள வேண்டும்!'' என்று வேண்டிக் கொண்டார்கள்.

அவர்கள் வேண்டுதலைக் கேட்டு மனம் இரங்கி, பிரம்ம தேவர், ''நவக்கிர நாயகர்களே ! நீங்கள் எங்களுடைய ஆக்ஞையை மீறி இச்சாபம் அடைந்தீர்கள். எனினும் செய்த தவறை உணர்ந்து சாப விமோசனம் கேட்டதால், உமக்கு ஒரு மாற்று வழி காண்பிக்கிறோம். நீங்கள் மண்ணுலகம் அடைந்து புண்ணிய பூமி பாரதத்தில், தமிழ் நாட்டின் காவிரியாற்றின் வடகரைக்குச் செல்லுங்கள் ! அங்கே அர்க்கவனம் எனப்படும் வெள்ளெருக்கங்காடு உள்ளது. அங்கே தங்கி தவமியற்ற வேண்டும்.

கார்த்திகைத் திங்கள் முதல் ஞாயிற்றுக்கிழமை ஆரம்பித்து, பனிரண்டு ஞாயிற்றுக்கிழமைகள் முடிய எழுபத்தெட்டு நாட்கள் தவம் புரிய வேண்டும்.

திங்கட்கிழமை தோறும் உதயத்திற்கு முன்னதாக காவிரியில் நீராடி பிராண வரதரையும் மங்கள நாயகியையும் வழிபடுதல் வேண்டும்.

உதயாதி ஏழு நாழிகைக்குள் அர்க்க இலையில் (வெள்ளெருக்கு இலை) ஒரு பிடியளவு தயிர் அன்னம் வைத்து அதை உண்ண வேண்டும் ஏனைய தினங்களில் நோன்பு இருத்தல் வேண்டும்.

இப்படி இந்த நோன்பை சற்றேனும் தவறாது செய்து வந்தால் சாப விமோசனம் உண்டாகும் !'' என்று பிரமதேவர் கூறினார்.

**அர்க்கவனம் அடைதல் :**

பிரம்ம தேவர் கூற்றுப்படி, நவக்கிரஹர்கள் மண்ணுலகம் சென்று தமிழ் நாட்டில் காவிரி நதியின் வடகரை வழியாக அர்க்க வனத்தைத் தேடி வந்து கொண்டிருந்தார்கள்.

அவர்கள் முன்பு ஒரு முனிவர் சென்று கொண்டிருந்தார். அவரே அகத்தியர் அகத்தியரிடம் தங்கள் சாப வரலாற்றைக் கூறினார்கள்.

அகத்தியர் அதனைக் கேட்டு, அவர்களை அர்க்க வனம் அழைத்துச் சென்றார்.

அவர்கள், அர்க்க வனத்தில் நீராடி, பிராணவரதரையும், மங்கள நாயகியையும் வணங்கினர்.

அகத்தியர், தம் குறுங்கரத்தை காவிரியாறு வரை நெடுங்கரமாக நீட்டி, நீரை முகந்து, மீண்டும் குறுங்கரமாகச் சுருக்கி, அதை நீரால் அபிஷேகம் செய்தார். நவக்கிரஹர்கள் இந்த அதிசயத்தைக் கண்டு, அகத்தியரின் தவச்சிறப்பை எண்ணி பெருமிதம் அடைந்தார்கள்.

காலவ முனிவரைப் பற்ற வேண்டிய தொழுநோய், பிரம்மாவின் சாபத்தால் நவக்கிரஹங்களைப் பற்றியது.

அவர்கள் நோயால் வருந்தி, அகத்தியரைப் பார்த்து, தாங்கள் தவம் செய்ய வேண்டிய முறையை அறிவிக்குமாறு வேண்டினர்.

அகத்தியர் நவக்கிரஹங்களின் துயர் நிலை கண்டு வருந்தி, நவக்கிரஹர்களே நீங்கள் தவம் செய்திட, இந்த அர்க்க வனத்தின் வடகிழக்குப் பகுதியைத் தேர்ந்தெடுத்து, அந்த இடத்தில் விநாயகரைப் ப்ரதிஷ்டை செய்து, தவம் விக்னமில்லாமல் முடிய பிரார்த்தனை செய்து கொள்ளுங்கள். கடுமையான நோன்பு மேற்கொள்ளுங்கள். தவம் செய்யுங்கள் பிரமன் கூறியபடி எருக்கிலையில் தயிரன்னம் வைத்து உண்ணுங்கள். இந்த அர்க்க வனத்தில் உள்ள ஒன்பது தீர்த்தங்களிலும் ஆளுக்கு ஒரு தீர்த்தமாகத் தேர்ந்தெடுத்து நாள் தோறும் அதில் நீராடுங்கள் . . '' என்று கூறினார்.

அப்போது நவக்கிரஹர்கள் அகத்தியரை நோக்கி, ''முனி புங்கவரே !'' நாங்கள் தவமிருப்பதும் தீர்த்த நீராடுவதும் சரி, எங்களை எருக்க இலையில் தயிரன்னம் உண்ணச் சொன்ன காரணம் என்ன ? என்று கேட்டனர்.

அது கேட்டு, அகத்தியர் புன்முறுவல் பூத்தார். ''அது தேவ ரகசியம் என்றாலும் நீங்கள் தெரிந்து கொள்ள ஆசைப்பட்டதனால் சொல்கிறேன். எருக்கிலையில் தயிரன்னம் வைக்கும் பொழுது எருக்கின் சாரத்தில் ஒரு அணுப் பிரமாணமான அளவு தயிரன்னத்தில் கலக்கும். அது தொழுநோய்க்கு மருந்தாகி தொழுநோயைக் குணப்படுத்தும் இதுதான் மகத்துவம். அதனாலேயே பிரம்மதேவன் இதனை தேவ ரகசியமாக உங்களிடம் மறைத்து நோன்பு முறை கூறினார் ! என்றார்.

**தவத்தினை மேற்கொண்டனர் !**

அகத்தியரிடம் விடை பெற்றனர். அர்க்க வனத்தில் வடகிழக்குப் பகுதியில் ஒரு இடத்தைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு அங்கே விநாயகரைப் பிரதிஷ்டை செய்து

சங்கல்பம் செய்து தவத்தை மேற்கொண்டனர். எழுபத்தெட்டு நாட்கள் நோன்பு நோற்றனர். நோன்பு காலத்தில் வரும் திங்கட்கிழமைகளில் விடிவதற்கு முன்பு காவிரியில் நீராடி பிராண வரதரை வழிபட்டனர். காலத்தில் எருக்க இலையில் ஒரு பிடி தயிர் அன்னம் வைத்து உண்டனர்.

குறிப்பிட்டபடி எழுபத்தெட்டு நாட்கள் நோன்பு முடித்து, எழுபத்தொன்பதாம் நாள் திங்கட்கிழமை வைகறையில் காவிரியில் நீராடினர். தங்கள் திரேகத்தில் இருந்த தொழுநோய் பாதிக்கு மேல் குணமாகி இருப்பதை கண்டு வியந்தனர் பிராண நாதரை அடைந்து துதித்தனர்.

வழிபாட்டின் முடிவில் பிராண வரதரும், மங்கள நாயகியும், நவநாயகர்களுக்கும் காட்சி தந்தருளினர்.

பிராண வரதர், அவர்களைப் பார்த்து "நவகோள்களே! உம்முடைய தவத்துக்கு அக மகிழ்ந்தோம். உம்முடைய தொழுநோய் இக்கணத்தில் முற்றிலும் நீங்கப்பெறும்" என்றார்.

**தனி ஆலயம் :**

இந்த அர்க்க வனத்தின் வடகிழக்கில் நீங்கள் தவம் புரிந்த இடத்தில் உங்களுக்கு என தனி ஆலயம் உண்டாகி, அது உங்களுக்கு தனி ஸ்தலமாக விளங்குவதாக அங்கே, நீங்கள் சுதந்திரமாக வழிபடுவோர்க்கு அனுக்ரஹம் செய்ய வரம் தந்தோம் . . . " என்று ஆசியருளி மறைந்தனர்.

இவ்வாறு தொழு நோய் நீங்கப் பெற்று வரமும் பெற்ற சந்தோஷத்தில் நவ நாயகர்கள் மிதந்தனர்.

அது சமயம், காலவ முனிவர் அவர்களை, அணுகி, பாத மலர் வீழ்ந்து பணிந்து, "அடியேனுக்கு வரம் ஈந்து தொழு நோய்க்கு ஆட்பட்டு வருத்தமுற்றீர்கள். தங்கள்

துன்பத்திற்குக் காரணமான என்னை மன்னித்தருள வேண்டும் !'' என்று கண்ணீர் விட்டுக் கரைந்தார்.

நவ நாயகர்கள் காலவ முனிவரின் கலக்கத்தை நீக்கினர்.

''நீர் இங்கே எப்படி வந்தீர்கள்'' என்று கேட்டனர்.

காலவ முனிவர் கூறினார் :

''நவ நாயகர்களே ! தாங்கள் விந்திய மலையில் எனக்குக் காட்சி தந்து, வரம் தந்து மறைந்த பின்னர் நான் மீண்டும் இமயமலைச் சாரலுக்குச் சென்று தங்கிய போது அகத்திய முனிவர் அங்கு வந்து யாவும் எடுத்துரைத்தார். அது கேட்டு மனமுடைந்து உங்களைக் காண ஓடோடி வந்தேன் '' என்று கூறினார். பிறகு காலவ முனிவரையும் அழைத்துக் கொண்டு தாங்கள் தவம் செய்த இடத்தையடைந்து தாங்கள், பிரதிஷ்டை செய்த விநாயகரை நன்றி உணர்வோடு வணங்கினர்.

தங்கள் சாபத்தை நீக்கி சாபப் பிணியான கோளை, நீக்கியதால், **''கோள் தீர்த்த விநாயகர்''** என்று நாமம் சூட்டினர். பின் காலவ முனிவரிடம் தங்களுக்காக இவ்விடத்தில் ஓர் தனி ஆலயம் நிர்மாணிக்கும்படிக் கூறி மறைந்தனர்.

காலவ முனிவர் நவ நாயகரின் ஆணைப்படி அங்கே கோயில் அமைத்து நவக்ரஹப் பிரதிஷ்டை செய்து வழிபட்டனர்.

**ஸ்தல சரித்திர வரலாறு :**

தொன்மையான காலம் தொட்டு நவ நாயகர்களுக்குத் தனித்தனியான செங்கற் கோயில்கள் இருந்து வந்தன.

கி.பி. பனிரெண்டாம் நூற்றாண்டில் சோழப் பெரு மன்னனான முதற் குலோத்துங்க சோழன் இத்தலத்தில் உள்ள சூரியன் ஆலயத்தை கருங்கற் கோயிலாகக்

கட்டுவித்தான் இதற்கு **குலோத்துங்க சோழ மார்த்தாண்டாலயம்** என்ற பெயர் வைத்தார்கள்.

ஸ்தபன மண்டபம், சபாநாயகர் மண்டபம், நர்த்தன மண்டபம் என்பவை விஜய நகர மன்னர்களின் காலத்தில் கட்டப் பெற்றிருக்கலாம் என்று கூறப்படுகிறது.

1988 நவம்பர் 20 ஆம் நாள் திருவாவடுதுறை ஆதீனத்தின் ஆதரவினால் அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகம் செய்தனர்.

**வழிபட்டுப் பேறு பெற்றவர்கள் :**

சூரியனார் கோயிலான இந்த ஸ்தலத்துக்கு வந்து பரீட்சித்து மஹாராஜா ஸ்ரீ சூரிய பகவானை வழிபட்டு பேறு பெற்றான்.

சித்திராங்கத பாண்டியன் சந்திர பகவானை வழிபட்டு பேறு பெற்றான்.

புரூரவசுமன்னன் அங்காரக பகவானை வழிபட்டு உய்ந்தான்.

இந்திரன் குரு பகவானை வழிபட்டு பேறடைந்தான். தூமகேது என்ற அரக்கன் சுக்கிர பகவானை வழிபட்டு பேறு பெற்றான்.

நள மஹராஜன் சனீஸ்வரரை வழிபட்டு பேறு பெற்றான்.

**திருமங்கலகுடி - சூரியனார் கோயில் :**

எருக்கங்காடாக இருந்தது அர்க்க வனம் ஜன நடமாட்டத்தால் எருக்காங்காடு அழிந்து குறைவுற்றது.

பிராண வரதேசுவரர் எழுந்தருளியுள்ள மேற்குப் பகுதி திருமங்கலக்குடி.

நவ நாயகர் அமைந்துள்ள வடகிழக்குப் பகுதி சூரியனார் கோயில் என்றும் பெயர் பெற்று இரண்டு ஸ்தலங்களாகப் பிரிந்தன.

நவ நாயகர்கள் இங்கே தவமியற்ற வந்தபொழுது, திருமங்கலக்குடியும் பிராணவரதேசுவரரையும் மங்கள நாயகியையும் வழிபட்டிருக்கிறார்கள். சூரியனார் கோயிலை வழிபடுகிறவர்கள் திருமங்கலக் குடி ஆலயத்தையும் வழிபட வேண்டும் அப்போதே வழிபாடு முழுமையடையும் என்கின்றனர்.

இரண்டு ஸ்தலமும் ஒரே ஸ்தலமாக இருந்து இரண்டு ஸ்தலமாகப் பிரிந்துள்ளன.

**பாடல் பெற்ற ஸ்தலம்**

திருமங்கலக்குடி, திருஞான சம்பந்தர் திருநாவுக்கரசர் பதிகங்கள் பாடிப் பெருமை பெற்ற ஸ்தலங்களாகும்.

மங்கலக்குடி, மங்கல விநாயகர், மங்கள நாதர், மங்கள நாயகி, மங்கள தீர்த்தம் என்று ஐந்து மங்களமுடைய ஸ்தலம் இதுவாகும்.

"மங்கலக்குடி ஆளும் ஆதிப்பிரான் அடிகள்
அடைந்து ஏத்தவே கோளும் நாளவை யோறும்

என்று திருஞான சம்பந்தர் பாடுகின்றார்.

"மங்கலக்குடி ஈசனை மாகாளி
செங்கதிர்ச் செல்வன் விண்ணோர் மண்ணோர்
சங்கு சக்ரதாரி சதுர்முகன்
அங்கு அகத்தியனும் அர்ச்சித் தாரன்றே !"

என்று மங்கலக்குடியில் வழிபட்டவர்களைத் திருநாவுக்கரசர் பாடுகின்றார்.

## கோயிலைப் பற்றிய தகவல்கள்

| | | |
|---|---|---|
| ஸ்தலப் பெயர் | : | சூரியனார் கோயில் |
| ஸ்தல வேறு பெயர் | : | அர்க்க வனம் |
| ஸ்தல மூர்த்திகள் | : | இறைவன் சூரியநாதர்<br>இறைவி பிரகாசாம்பிகை |

| | | |
|---|---|---|
| | | விநாயகர் கோள் தீர்த்த விநாயகர் |
| நவ கோள் சிறப்பு மூர்த்தி | : | ஸ்ரீ சிவ சூரிய நாராயண ஸ்வாமி (சூரியன் மனைவிகள் உஷா தேவி, பிரத்தியுஷா தேவி |
| பரிவார மூர்த்திகள் | : | நவகோள்கள், நடராசர், சிவகாமி, காசி |
| விசுவநாதர், | | |
| | | விசாலாட்சி, தேஜஸ் சண்டேசுவரர் |
| சூரிய பகவானின் பானு வேறுபெயர்கள் | : | ஆதவன், பகலவன், |
| | | தேசிகன், ஆதித்தன், ஞாயிறு பிரபாகரன், கதிரவன், பாஸ்கரன், அருக்கன், கனலி தினகரன், பரிதி மார்த்தாண்டன், வெய்யோன், |

**ஸ்தல இருப்பிடம் :** *தஞ்சை மாவட்டம், கும்ப கோணம் வட்டத்தில் காவிரியாற்றின் வட கரையில் அமைந்த ஸ்தலம் கும்பகோணத்திலிருந்து மயிலாடு துறைக்குச் செல்லும் நெடுஞ்சாலையில் ஆடுதுறைக்கு வடக்கே 3. கி.மீ தொலைவில் இந்த ஸ்தலம் அமைந்துள்ளது*

**பேருந்து வழித்தடம் :** *கும்பகோணத்திலிருந்து மயிலாடு துறை செல்லும் வழித்தடத்தில் ஆடுதுறைக்கு வடக்கே திருமங்கலக்குடி காளியம்மன் கோயில் அருகே சூரியனார் பேருந்து நிறுத்தத்தில் இறங்கி வடகிழக்கே சுமார் 1.கி.மீ நடந்து வரவேண்டும்.*

**இருப்புப் பாதை வழித்தடம் :**

கும்பகோணம் மயிலாடுதுறை இருப்புப் பாதையில் கும்பகோணம் - மயிலாடுதுறை நிலையங்களுக்கு இடையே ஆடுதுறை இருப்புப்பாதை நிறுத்தத்தில் இறங்கி 3.கிமீட்டர் தூரம் பேருந்து மூலம் இத்தலத்தை அடைய வேண்டும்.

**ஸ்தலம் செல்ல தக்க காலம் :**

மழை, வெயில், காலம் தவிர, ஆடி, ஆவணி, புரட்டாசி, கார்த்திகை, தை, மாசி மாதங்களில் இத்தலத்திற்குச் செல்லலாம்.

**இந்த ஸ்தலத்தின் ஆலயம் திரு கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்திற்குச் சொந்தமாய், ஆதீனத்தின் சிறந்த பரிபாலனத்தின் கீழ் இருந்து விளங்கி வருகிறது.**

## ஸ்தல அமைப்பு

சூரிய கோயில் என்ற ஊரின் மத்தியில் ஸ்ரீ சூரிய பகவானின் ஆலயம் மேற்கு நோக்கி அமைந்துள்ளது. மூன்று நிலைகளையும் ஐந்து கலசங்களையும் கொண்ட ராஜ கோபுரம் சுமார் 50 அடி உயரத்தில் அமைந்துள்ளது. கோபுரத்தில் புராணச் செய்திகளைக் காட்டும் சுதைச் சிற்பங்கள் எழில் வாய்ந்தவையாக உள்ளன.

ஒரே பிரகாரமும் நாற்புறமும் உயரமான மதில்களும் கொண்டுள்ளன. ஆலயத்தின் மத்தியில் சூரியனின் கர்ப்பக் கிரஹம் அமைந்துள்ளது. மூலவர் சூரிய பகவானே

பிரதானமான கருவறையில் மேற்கு முகமாக நின்ற கோலத்தில் அருள் பாலிக்கிறார். இவருக்கு இடது புறத்தில் உஷா தேவியும், வலது புறத்தில் பிரத்யுஷாதேவி எனப்படும் சாயா தேவியும் நின்றபடி தோற்றமளிக்கின்றனர். சூரிய பகவான் தம் இரு

கரங்களிலும் செந்தாமரை ஏந்தி புன்முறுவல் பூக்கிறார். இவரது கர்ப்பக் கிரகத்தின் மேல் ஏகதள விமானம் அமைந்துள்ளது நான்கு மூலைகளிலும் சுதைச் சிற்பங்கள்.

கருவறைக்கு முன்பாக அர்த்த மண்டபமும், மகா மண்டபமும் உள்ளன. மகா மண்டபத்திலிருந்து அர்த்த மண்டபத்திற்குள் நுழையும் வாயிலின் தெற்குப் புறத்தில் தண்டியும் வடக்குப் புறத்தில் பிங்கலனும் துவார பாலகர்களாகக் காட்சி தருகின்றார்கள். இவர்களுக்கு முன்பாக சூரியனை நோக்கியவாறு சூரிய வாகனம் குதிரை நிற்கிறது.

**குரு பகவான்**

இவர், மகா மண்டபத்தில் (குரு மண்டபத்தில்) குதிரைக்குப் பின்பு மேற்காக நின்ற கோலத்தில் சூரியனை நோக்கியவாறு கிழக்கு முகமாகக் காட்சியளிக்கிறார். வலது கரத்தால் அபய முத்திரை காட்டி, இடது கரத்தைத் துடையில் ஊன்றியுள்ளார். மேலே ஏகதள விமானமும், விமானத்தின் மூலைகளில் மீன்களின் சுதை சிற்பங்களும் அமைந்துள்ளன.

கருவறைக்கு வெளியே தென்மேற்கில் சனீஸ்வரனும், தெற்கில் புதனும், தென்கிழக்கில் அங்காரகனும், கிழக்கில் சந்திரனும், வடகிழக்கில் கேதுவும், வடக்கில் சுக்கிரனும், வடமேற்கில் ராகுவும் தனித்தனிக் கோயில்களில், அதாவது சூரியனைச் சுற்றி எட்டு கோண திசைகளிலும் எட்டு கிரஹ நாயகர்கள் தோன்றுகிறார்கள்.

**சனி பகவான் :**

தெற்குப் பிரகாரத்தில் அமைந்த சிறு கோயிலில் நின்ற கோலத்தில் கிழக்கு முகமாகத் தோற்றம் தருகிறார். வலது கரத்தில் அபய முத்திரை இடது கரம் துடை மேல் ஊன்றியுள்ளார்

**புத பகவான் :**

தெற்குப் பிரகாரத்தில் சனீஸ்வரர்க்குக் கிழக்கே உள்ள சிறுகோயிலில் நின்ற நிலையில் வடக்கு முகமாக தோன்றுகிறார். வலது கரத்தில் அபய முத்திரையும், இடது கரத்தைத் துடையிலும் ஊன்றி உள்ளார். கருவறைக்கு மேலே ஏகதள விமானமும், நான்கு மூலைகளில் புதனது சுதைச் சிற்பங்களும் அமைந்துள்ளன

**அங்காரக பகவான் :**

கிழக்கு தெற்குப் பிரகார சந்திப்பில் (புதனுக்குக் கிழக்கே) உள்ள சிறு கோயிலில் நின்ற நிலையில் மேற்கு முகமாகத் தோன்றுகிறார். வலது கரத்தில் அபய முத்திரை காட்டி, இடது கரத்தை துடையில் ஊன்றி உள்ளார். மேலேயுள்ள ஏகதள விமானத்தின் நான்கு மூலைகளிலும் அங்காரகனது சுதைச் சிற்பங்கள் திகழ்கின்றன.

**சந்திர பகவான் :**

கிழக்குப் பிரகாரத்தில், அங்காரகனுக்கும், கேதுவுக்கும் மத்தியில் உள்ள சிறு கோயிலில் நின்ற கோலத்தில் மேற்கு முகமாக நின்ற தமது இரு கரங்களிலும் குமுதமலர்கள் ஏந்தியுள்ளார். இவரது தலைக்குப் பின்னால் முழுமதியின் முழுவட்டம் மேலே ஏகதள விமானம்

**கேது பகவான் :**

கிழக்கு வடக்குப் பிரகாரங்களின் சந்திப்பில் (சந்திரனுக்கு வடக்கே) உள்ள சிறு கோயிலில் நின்ற கோலத்தில் மேற்கு முகமாகத் தோன்றுகிறார். பாம்புப் படத்துடன் மனிதத்தலை உடையவராக இவர் உள்ளார். இரு கரங்களையும் குவித்து அஞ்சலி முத்திரையாக வைத்துள்ளார்.

**சுக்கிர பகவான் :**

வடக்குப் பிரகாரத்தில், ராகுவுக்கும் கேதுவுக்கும் நடுவில், சிறு கோயிலில் நின்ற கோலத்தில் தெற்கு

முகமாகத் தோன்றுகிறார். வலது கரத்தில் அபய முத்திரை இடது கரத்தைத் துடையில் ஊன்றியிருக்கிறார். மேலே ஏகதள விமானம் - நான்கு மூலைகளிலும் சுக்கிரனது சுதைச் சிற்பங்கள்.

**இராகு பகவான்**

சுக்கிரனுக்கு மேற்கே வடக்குப் பிரகாரத்தில் உள்ளதான சிறு கோயிலில் நின்ற நிலையில் கிழக்கு முகமாகத் தோன்றுகிறார். இவரது தலைப்பகுதி அசுரன் தலையாகவும், உடற்பகுதி பாம்பாகவும் அமைந்துள்ளன.

**கோள் தீர்த்த விநாயகர் :**

பிரம்ம தேவனால் சாபமடைந்த நவக்ரஹ நாயகர்கள் இந்த ஸ்தலத்துக்கு வந்து தவம் செய்ய முற்பட்டபோது, தங்களுக்கு ஏற்பட்ட பிணியான கோள் நீங்கும் முகத்தான் இவ்விநாயகரை ஸ்தாபித்து துதித்து வந்தனர். கோளை விநாயகர் அகற்றியதன் பொருட்டு கோள் தீர்த்த விநாயகர் என்ற நாமம் ஏற்பட்டது.

விநாயகரின் ஆலயம் பிரகாரத்தின் தென் மேற்குமூலையில் அமைந்துள்ளது. தள விமானம் விநாயகர் கிழக்கு முகமாகத் திகழ்கிறார்.

**மண்டபங்கள் : -**

சூரிய பகவானின் கர்ப்பக் கிரஹத்திற்கு முன்பாக அர்த்த மண்டபம், மகா மண்டபம், ஸ்தபன மண்டபம், சபா நாயகர் மண்டபம், நர்த்தன மண்டபம் என்று தொடர்கிறது. விநாயகர் ஆலயத்துக்கு வடகிழக்கே உள்ள முதல் மண்டபம் நர்த்தன மண்டபம் இதில் ஏறுவதற்கு தெற்குப் பக்கமாக அகலமான படிக்கட்டுகள் உள்ளன. இம் மண்டபத்தை ஒட்டிக் கிழக்கே இருப்பது சபாநாயகர் மண்டபம். இங்கு சிவபெருமானும் நவக்கிரஹ உற்சவ மூர்த்தியும் உள்ளனர். இதன் கிழக்கே ஸ்தபன மண்டபமும், இதன் வடக்குப் புறத்தில் ஸ்ரீ காசி விசுவநாதரும் விசாலாட்சியும் காட்சி தருகின்றனர்.

இம் மண்டபத்துக்கு கிழக்கே மகா மண்டபம் இருக்கிறது. மண்டபத்தில் குரு பகவான் இருப்பதால் குரு மண்டபம் என்ற பெயரும் உண்டு.

**ஸ்தல தீர்த்தங்கள் :**

கோயில் ராசகோபுர வாயிலின் இடப்பக்கம் உள்ள சூர்ய தீர்த்தம் சூரியனால் ஏற்படுத்தப்பட்டு அவர் நீராடிய தீர்த்தம்.

அது போலவே ஏனைய எண்மரும் தங்கள் பெயரில் தீர்த்தம் உண்டாக்கியதாக ஸ்தல புராணம் கூறுகிறது. தற்போது கோயிலின் உள்ளே வடக்குப் பிரகாரத்தில் ஒரு சிறு தீர்த்தக் கிணறு இருக்கிறது.

**ஸ்தல விருக்ஷம்**

இந்த ஸ்தல விருக்ஷம் வெள்ளெருக்கு ஆகும்.

**முக்கிய குறிப்புகள் :**

தென்பக்கம் மதில் சுவரில் விநாயகர் ஆலயம் முன்பு வண்ணத்தால் எழுதப்பட்ட சில குறிப்புகள் காணப்படுகின்றன.

அகல் விளக்குகள் ஆலயத்தில் ஏற்றுவதால் உண்டாகும் பலன்கள், சூரியனார் கோயிலிலிருந்து சுற்றுப்புற ஸ்தலங்களுக்கு உள்ள தூரம், காலை பகல், மாலை ஆகிய நேரங்களில் சிவ தர்சனம் செய்வதால் உண்டாகும் பலன்கள், நவகோள்கள் பற்றிய குறிப்புகள் இவ்வாறு பல தேவையான குறிப்புகள் காணப்படுகின்றன.

**கல்வெட்டுகள்**

இந்த ஸ்தலத்தில் நான்கு கல்வெட்டுகள் இருக்கின்றன.

முதலாம் குலோத்துங்க சோழன் இவ்வாலயத்தை கற்கோயிலாக மாற்றி அமைத்தான் என்பது ஒன்று. விஜய நகர மன்னர்கள் செய்த திருப்பணி பற்றி இரண்டாம்

கல்வெட்டு கூறுகிறது.

**இந்த ஸ்தலத்தின் திருவிழாக்கள்**

1. ஆடிக் கடைசிச் செவ்வாய்
2. ஆவணி முதல் ஞாயிறு
3. புரட்டாசி நவராத்திரி விழா
4. கார்த்திகை ஞாயிறு
5. கார்த்திகை சோம வாரம்
6. தை மாத அட்டமி தீர்த்தவாரி
7. மாசிச் சிவராத்திரி
8. நவக்கிரகச் சந்தனக்காப்பு
9. குருப்பெயர்ச்சி
10. சனிப்பெயர்ச்சி

**பூசைகள்**

1. நவகிரஹ சந்தனகாப்பு பூஜை
2. சனிப்பெயர்ச்சியின் போதும், குருப் பெயர்ச்சியின் போதும், சிறப்புப் பூஜைகள் வழிபாடுகள் நடைபெறுகின்றன.
3. தினசரி மூன்று கால பூஜைகளும் நடைபெறுகின்றன

**ஸ்தலத்தில் தங்கும் வசதி :**

20 பேர்கள் தங்கக் கூடிய ஒரு சத்திரம் மட்டுமே உள்ளது. சமீப நகரான கும்பகோணத்தில் நவீன வசதிகளுடன் உள்ள தங்கும் விடுதிகள் உள்ளன. நல்ல உணவு விடுதிகள் இல்லை

**ஆலய வழிபாட்டு முறை**

மற்றைய ஆலயங்களின் வழிபாட்டு முறைகளுக்கும், இந்த ஆலயத்து வழிபாட்டு முறைக்கும் சற்று வேறுபாடு உள்ளது. ஆகவே அந்த வழிபாட்டு மரபை அறிந்து வழிபட வேண்டும்.

இங்கு வழிபடுவதற்கு முன் திருமங்கலக்குடி பிராண வரதரையும், அம்பாளையும் வழிபட்டு பின் இத்தலத்தில் வழிபடுதலை ஆரம்பிக்க வேண்டும்

முதலில் ராஜ கோபுரத்திற்கு வடக்குப் பக்கம் உள்ள சூரிய புஷ்கரணியில் நீராடலை மேற்கொள்ள வேண்டும். நீராட முடியாதவர்கள் அந்த தீர்த்தத்தை சிரசில் தெளித்துக் கொள்ளலாம்.

அடுத்தாற் போல் இராஜ கோபுரத்தின் முன்பு நின்று தலை மேல் கை குவித்து வணங்கி கோபுர தரிசனம் செய்தல் வேண்டும்.

பிறகு வாயிற்படியைத் தொட்டு வணங்கி விட்டு சூடம் ஏற்றி வைத்து துதித்து விட்டு ஆலயம் உள்ளே செல்லுதல் வேண்டும்.

கொடி மரத்தை வணங்கி, தென்மேற்கு மூலையில் உள்ள கோள் தீர்த்த விநாயகரை வழிபடுகின்றோம். பிரம்மனது சாபம் பெற்ற நவக்ரஹங்கள் இங்கு வந்துற்ற போது அவர்களால் பிரதிஷ்டை செய்து அவர்கள் சாபம் நீங்கிடச் செய்த தவம் குறையின்றி முழுமை பெற வழிபட்ட விநாயகராம் அவரை, நாமும் அவர் முன் நின்று ஸங்கல்பம் செய்து அர்ச்சனைக்குப் பின் தீபம் காட்டி தரிசனம் செய்ய வேண்டும்.

பின்பு விநாயகர் சன்னிதிக்கு வட கிழக்கு திசையில் உள்ள நர்த்தன மண்டபத்தின் படிக்கட்டுகளின் வழியாக சபாநாயகர் மண்டபத்தை அடைய வேண்டும். நடராஜர் சிவகாமியை தரிசிக்கின்றோம்.

பிறகு அர்த்த மணடபத்தைக் கடந்து உள்ளே சென்று காசி விசுவநாதர், விசாலாட்சி, அம்மையையும் வழிபடல் வேண்டும். உற்சவ மூர்த்தியையும் தரிசிக்கின்றோம்.

பிறகு ஸ்தபன மண்டபத்தைத் தாண்டி மகா மண்டபமான குரு மண்டபத்தை அடைந்து அர்த்த

மண்டப நுழைவாயிலுக்கு வெளியே ஸ்ரீ சூரிய பகவான் ஸந்நிதியில் சூரிய பகவான் முன் நின்று அர்ச்சனை, அபிஷேகம் தூப தீபம் நைவேத்தியம் முதலானவற்றைச் செய்து வழிபடுகின்றோம். அவரது இரு பக்கம் உள்ள தேவிகளையும் வழிபடுகின்றோம்.

பிரசாதம் பெற்ற பின்பு, அப்படியே மேற்கே திரும்பி சூரிய பகவானுக்கு எதிரே இருக்கும் குரு பகவானை வணங்கி வழிபடுகிறோம்.

பிறகு தெற்குப் புறத்தே உள்ள கர்ண துவார வழியாகக் கீழே இறங்கித் தெற்கு பிரகாரத்தையடைந்து சூரிய பகவானின் கருவறையை ஒட்டியவாறு செல்லும் வழியில் கிழக்கே சென்றால் சனி பகவான் ஆலயம் உள்ளது. அங்கு சென்று நெய் தீபத்தை ஏற்றி வைத்து புஷ்பாஞ்சலி செய்து சூடம் ஏற்றி வழிபடுகிறோம். அங்கு நாம் செல்லும் வழி அறிய அம்புக்குறி போடப்பட்டுள்ளது. அதைப் பின்பற்றிச் சென்று புதனை வழிபடுகிறோம். பிறகு அங்காரக தேவனை வழிபட்டு வடக்கு முகமாகச் சென்று சந்திரனையும், கேதுவையும் சூடம் ஏற்றி வைத்து புஷ்பாஞ்சலி செய்கின்றோம். வட பக்கமுள்ள சுக்கிரன், ராகு தேஜஸ் சண்டேசுவரரையும் வணங்குகின்றோம்.

மீண்டும் விநாயகரிடம் வந்து, அவரைத் துதித்து **"விக்கினங்கள் விலக்கிடும் விநாயகனே ! எங்கள் முன் வினைத் துயர் மறைந்திட நவக்ரஹ நாயகர்களை வழிபட்டோம். நீரும் எங்கள் துன்பம் துடைத்து நிம்மதியை அருளிட வேண்டும் !"** என்று மனம் கனிந்து பிரார்த்தித்திடல் வேண்டும். பிறகு கொடி மரத்துக்கு வந்து வீழ்ந்து அங்கிருந்து வடக்கு கிழக்கு தெற்குப் பிரகார வழியாக ஒன்பது முறை வரவேண்டும். மற்ற ஆலயங்களில் நாம் வலமாகச் சுற்றி வருவோம். இவ்வாலயத்தில் இடமாகச் சுற்றி வருதல் வேண்டும்.

கொடி மரத்தடியில் மீண்டும் வீழ்ந்து வணங்கி எழுந்து ஒரு புறமாகச் சென்றமர்ந்து விநாயகர் முதல் தல மூர்த்திகள் யாவரையும் தியானித்தல் வேண்டும்.

பிறகு எழுந்து சென்று கோபுர வாயிலை அடைந்து அங்கே உள்ள சாதுக்களுக்கு நம்மால் இயன்ற தர்மங்கள் செய்து, மன அமைதியுடன் நம்மிருப்பிடம் செல்லுதல் வேண்டும்.

## பொதுவான தோஷ நிவர்த்தி

ஏழரை ஆண்டுச் சனி, அஷ்டமத்துச் சனி, அர்த்தாஷ்டமச் சனி என சனியால் பீடிக்கப்பட்டவர்களும், மற்றுமுள்ள கிரஹ தோஷம் கொண்டோரும் சூரியனார் கோவிலுக்கு வந்து பனிரெண்டு ஞாயிற்றுக்கிழமை காலம் தலவாசம் செய்து வழிபட வேண்டும்.

குறிப்பிட்ட ஒரு ஞாயிற்றுக்கிழமை அதிகாலையில் இருந்து தொடர்ந்து பனிரெண்டு ஞாயிற்றுக்கிழமை முடிகின்றவரை, அதாவது சுமார் இரண்டரை மாத காலம் (78) இந்த ஸ்தலத்திலேயே தங்கியிருந்து தினமும் நவ தீர்த்தங்களில் நீராடி நோன்பிருந்து திருமங்கலக்குடி பிராண நாதரையும் மங்கள நாயகியையும், நவநாயகர்களையும் நியமப்படி வழிபட்டு வருதல் வேண்டும். தங்கள் தோஷத்துக்குரிய பரிகாரங்களையும் செய்து வருதல் வேண்டும். இவ்வாறு செய்து வருவோமெனில் நம் தோஷங்கள் நிவர்த்தியாகும் என்பது நிச்சயம்.

மற்றும் களத்திர தோஷம், விவாஹப் ப்ரதிபந்த தோஷம், புத்திர தோஷம், புத்திரப் பிரதிபந்த தோஷம், வித்யா பிரதிபந்த தோஷம், உத்யோக பிரதிபந்த தோஷம் உள்ளவர்களும், சூரிய தசை, சூரிய புத்தி உடையவர்களும் இந்த ஸ்தலத்துக்கு வந்து, ஞாயிற்றுக்கிழமைகளில் தொடர்ந்து வழிபாடு

செய்துவரின் தோஷங்கள் அகலும் என்பதில் ஐயமில்லை

**மற்ற சூரியனார் கோயில் - விவரங்கள்**

1. ஐரோப்பா, தென் அமெரிக்கா, சீனா முதலிய நாடுகளில் சூரியனின் கோயில்கள் அழிவுற்ற நிலையில் காணப்படுகின்றனவாம்.

2. ஜப்பான் நாட்டுச் சக்ரவர்த்தி சூரிய வமிசத்தினன் ஆவான்.

3. சூரியனை முழு முதற் கடவுளாகக் கொண்ட மதம் சௌர மதமாகும்.

4. காஷ்மீரத்தில் 8வது நூற்றாண்டில் மார்த்தாண்டார் கோயில் (சூரியனார் கோயில்) ஏற்பட்டது

5. ஒரிசாவில் பூரிக்கு அருகில் உள்ள கொனார்க் என்ற இடத்தில் உள்ள சூரியனார் கோயில் பிரஸித்தமானது

6. மகாபலிபுரத்தில் அழகான சிலை ஒன்று உள்ளது

7. ரிக் வேதத்தில் சூரியனின் துதிகள் காணப்படுகின்றன (செய்திகள்: கலைக் களஞ்சியம்

**மற்ற கோயில்கள் :**

சூரிய பகவானுக்கு உகந்த இரண்டாவது இடம் திருக்கண்டியூர் வீரட்டம். இக்கோயில் தஞ்சையிலிருந்து திருவையாறு போகும் வழியில் 10வது கிலோ மீட்டரில் குடமுருட்டியாற்றுக்கும் காவிரிக்கும் நடுவில் உள்ளது

**திருப்புறவார் பனங்காட்டூர் :**

ஆதவன் அகமகிழும் மூன்றாம் ஸ்தலம் திருப்புறவார். பனங்காட்டூர். இது இன்று பனையபுரம் என்று வழங்கப்படுகிறது. இந்த ஸ்தலம் விழுப்புரத்திலிருந்து வடக்கே சுமார் 9 கிலோ மீட்டரில் முண்டியம்பாக்கம் ரயில் நிலையத்திலிருந்து ஏறத்தாழ 3. கி. மீ தூரத்தில் உள்ளது. இறைவர் பனங்காட்டீஸ்வரர், இறைவி : புறவம்மை

**ஸ்தல விருக்ஷம் :**

இத் திருத்தலத்தில் சித்திரை மாதம் முதல் தேதியில் இருந்து ஏழாம் தேதி வரை தினமும் காலையில் சூரியன் உதயமாகும் போது அதன் கிரணங்கள் முதலில் இறைவன் மீதும், பிறகு அம்பாள் மீதும் விழும். இக்காட்சியை எந்நாளும் காணலாம். இத்தகு அருட்காட்சி கலியுக அற்புதமன்றோ ?

**நவ நாயகர்கள் (சூரிய பகவான்)**

உலகத் தோற்றத்தின் போது முதன் முதலாக 'ஓம்' என்ற ஓசை உண்டாக அந்த ஓசையிலிருந்து ஜகஜ்ஜோதியாக சூரியன் தோன்றினான் - இப்படி மார்க்கண்டேய புராணம் கூறுகின்றது.

காசியபருக்கும் அதிதிக்கும் பிறந்த விசுவவான் முதலிய 12 புத்திரர்களே பன்னிரு சூரியர்கள் ஆனார்கள் என்று பாரதம் செப்புகின்றது.

வானவெளியில் நாம் காண்பது ஒரு சூரியன் எனினும், பன்னிரு ராசிகளிலும் ஸஞ்சரிப்பதால் பன்னிரு சூரியர்களாகக் கொள்ளப்படுகிறான். சூரியன் ஏறி வரும் தேருக்கு ஒரு சக்கரமே ! ஆனால் அத்தேரை ஏழு குதிரைகள் இழுக்கின்றன அவை ஏழு நிறம் உடையவை. சாரதி அருணன். இவன் காலில்லாத நொண்டி இத்தேர் மேற்கு முகமாக ஓடி மேரு மலையை வலமாகச் சுற்றி வருகிறது.

சூரிய பகவான் நவ நாயகர்களின் தலைவர் என்றும், சுபக்கிரஹர் என்றும் பார்த்தோம் மூவகை நாடிகளில் பிங்கலை நாடி சாத்வீக குணம், குலத்தில் க்ஷத்ரியர்.

சூரியனை சிவப்பு மலர்களால் அர்ச்சிப்பதாலும், சிவப்பு வஸ்த்ரம். உடுத்திக் கொள்வதாலும், மாணிக்க மணியை அணிந்து கொள்வதாலும், ஞாயிறு விரதம் இருப்பதாலும் கோதுமை தானியத்தை தானம்

செய்வதாலும் சூரிய நமஸ்காரம் செய்து வருவதாலும் சூரிய தோஷம் நிவர்த்தி ஏற்படும்.

**சூரியனுக்கு உரித்தானவை :**

| | | |
|---|---|---|
| ராசி | : | சிம்மராசிக்கதிபதி |
| திக்கு | : | நவக்கிரஹங்களுக்கு நடு |
| அதிதேவதை | : | அக்கினி |
| ப்ரத்யதிதேவதை | : | உருத்திரன் |
| நிறம் | : | சிவப்பு |
| வாகனம் | : | ஏழு குதிரை பூட்டிய தேர் |

**சூரியனுக்கு உகந்தவை**

| | | |
|---|---|---|
| தானியம் | : | கோதுமை |
| மலர் | : | செந்தாமரை |
| வஸ்த்ரம் | : | சிவப்புக்கரை - சிவப்பு ஆடை |
| இரத்தினம் | : | மாணிக்கம் |
| நிவேதனம் | : | கோதுமைச் சக்ரான்னம் |
| சமித்து | : | வெள்ளெருக்கு |
| உலோகம் | : | செம்பு |

## சந்திரன்

சந்திர பகவான் மகாவிஷ்ணுவின் இதயத்திலிருந்து பிறந்தவர். அமுதம் பெற தேவர்கள் திருப்பாற் கடலைக் கடைந்தபோது அக்கடலில் இலக்குமிக்கு முன்னே பிறந்தவர் அத்திரி முனிவர் - அனுசூயா தேவிக்கு மகனாய்ப் பிறந்தவர் - இவ்வாறு புராணங்கள் புகலும். மேலும் புராணங்கள் கூறுபவை.

தக்கன் அசுவதி முதலான 27 புத்ரிகளையும் சந்திரனுக்கு மணம் முடித்துத் தர அவர்களில் உரோகணி என்பவளிடத்தில் மட்டும் சந்திரன் மிகக் காதல் கொண்டிருந்ததாகவும் அதனால் தக்கன் கோபப்பட்டு சந்திரன் நாள்தோறும் தேய்பவனாகச் சாபமிட சிவபெருமானது கடாக்ஷத்தால் மீண்டும் நாள்தோறும்

வளர்பவனாக இருந்து வருகிறான். பதினாறு கலைகளை உடையவன். உடம்பில் அமுதத்தை வைத்திருப்பவன் இவனது மண்டலத்தில் பராசக்தி தங்கி இருக்கிறாள்.

இவர் சுபக்கிரஹர் சிவபெருமானின் மூன்று கண்களில் இடக்கண் - நாடிகளில் இடக்கலை நாடி - சாத்வீகக் குணம் - குமுத மலர்க்கு உரியவர். மன்மதனுக்கு வெண் கொற்றக் குடையாக விளங்குபவர். மருந்துகளையும் பயிர்களையும் வளர்க்கின்றவர். பராசக்தியின் அம்சம் அழகுடையவர். உயிரினங்களுக்கு போகங்களை ஊட்டுபவர்.

இவர் மறுபெயர்கள், அம்புலி, இந்து, உடுபதி, கலாநிதி, குமுத சகாயன், சசாங்கதன், கதிர், நிலா மதி அமுதமெடுக்க முயற்சித்த போது வாசுகி ஆலகால விஷத்தை உமிழ்ந்திட தேவர்கள் நஞ்சின் வெம்மையால் மயக்க நிலையடைய அம்மயக்கத்தை தனது அமிர்த கலைகளால் மாற்றி மெய் குளிர வைத்தவன்.

சந்திரனை வெண்மை நிற மலர்களால் அர்ச்சிக்க வேண்டும். வெண்மை நிற வஸ்திரம் உடுத்தி முத்து மாலை அணிந்து பௌர்ணமி விரதம் இருத்தல் வேண்டும். அரிசி தானம் கொடுப்பதால் சந்திர தோஷங்கள் நிவர்த்தியாகும்.

**சந்திரனுக்கு உரியவை**

| | | |
|---|---|---|
| ராசி | : | கடக ராசிக்கதிபதி |
| திக்கு | : | தென்கிழக்கு |
| அதிதேவதை | : | நீர் |
| ப்ரத்யதிதேவதை | : | கௌரி |
| ஸ்தலம் | : | திருப்பதி |
| நிறம் | : | வெண்மை |
| வாகனம் | : | வெள்ளைக்குதிரை |

*சந்திரனுக்கு உரித்தானவை :*

| | | |
|---|---|---|
| தானியம் | : | நெல், பச்சரிசி |
| மலர் | : | வெண் அலரி, வெண்அல்லி |
| வஸ்திரம் | : | வெள்ளை ஆடை |
| இரத்தினம் | : | முத்து |
| நிவேதனம் | : | தயிர் அன்னம் |
| சமித்து | : | முருக்கஞ் சமித்து |
| உலோகம் | : | ஈயம் |

## *அங்காரகன்*

*சிவபெருமான் தேவியைப் பிரிந்து கல்லால மரத்தின் கீழ் யோகம் புரிந்த போது அவரது நெற்றிக் கண்ணில் இருந்து நீர்த்துளி பூமியில் விழ அதனின்றும் தோன்றியவர் அங்காரகர். அதனால் பூமியின் மகன் (ஜென்) என்று அழைக்கப்பட்டார் - என்றும்*

*பாரத்துவாச முனிவரின் மகனாகப் பிறந்து பூமி தேவியால் வளர்க்கப்பட்டார் என்றும், தக்க யாகத்தை அழித்த பிறகு தேவர்களின் வேண்டுகோளுக்கிணங்கி சினம் தணியப் பெற்று அங்காரக வடிவமடைந்தார் என்றும், புராணங்கள் புகல்கின்றன.*

*இவர் செந்நிறமானவரால் செவ்வாய் என்று உலகத்தவர் அழைக்கின்றனர். இவரது கிரகம் செவ்வொளி வீசி ஒளிர் விடுவதால் செம்மீன் என்று தமிழ் நூல்கள் சொல்லுகின்றன.*

*இவர் பாரத்துவாச கோத்திரர் சிவப்பு நிறம் கொண்டு அழகாகத் தோன்றுபவர். மாலினி, சுசிலீனி என்ற இரண்டு மனைவியர் - இராஜச குணத்தவர். ரத்த சம்பந்த சகோதர காரகர், பூமி காரகர் - பெருந்தன்மை, கண்டிப்பு, வைராக்யம், பகைவரை எதிர்க்கும் ஆற்றல் தருபவர் தற்பெருமைக்காரர்.*

*முருகனை வழிபடுவதாலும் பவழ மாலை, பவழ மோதிரம் அணிவதாலும் சிவப்பு நிற ஆடை*

அணிவதாலும், துவரையைத் தானம் கொடுப்பதாலும், கார்த்திகை, செவ்வாய்க்கிழமை விரதம் இருப்பதாலும் அங்கார தோஷங்கள் நிவர்த்தியாகும்.

**அங்காரகனுக்கு உரித்தானவை :**

| | |
|---|---|
| ராசி | : மேஷ, விருச்சிக ராசிக்கதிபதி |
| திக்கு | : தெற்கு |
| அதிதேவதை | : பூமா தேவி, சுப்ரமணியர் |
| ப்ரத்யதிதேவதை | : க்ஷேத்திர பாலகர் |
| ஸ்தலம் | : வைத்தீஸ்வரன் கோயில் |
| நிறம் | : சிவப்பு |
| வாகனம் | : ஆட்டுக்கிடா |

**அங்காரகனுக்கு உகந்தவை**

| | |
|---|---|
| தானியம் | : துவரை |
| மலர் | : செண்பகம், செவ்வலரி |
| வஸ்திரம் | : சிவப்பு ஆடை |
| இரத்தினம் | : பவழம் |
| நிவேதனம் | : துவரம் பருப்புப் பொடி அன்னம் |
| சமித்து | : கருங்காலி |
| உலோகம் | : செம்பு |

## புதன்

சந்திரனுக்கும் தாரைக்கும் பிறந்தவர் புதன் ஸகல கலை வல்லுநர். மஹாஞானி. சுபகிரஹர் தன்னை வணங்குபவர்களுக்கு மிகுந்த அறிவைக் கொடுப்பவர் ஞான காரகர், வாக்கு வன்மையளிப்பவர். தீய கிரஹங்களால் ஏற்படும் பீடைகளை அழிப்பவர் சாந்த குணமுள்ளவர் இவர் மனைவி இளை. புத்திரர் பூருரவா மகாவிஷ்ணுவை வழிபடுதலாலும், பச்சை நிறப்பட்டு உடுத்துவதாலும் பச்சைப் பயிர் தானமளிப்பதாலும் விஷ்ணு சகஸ்ரநாம பாராயணம் பண்ணுவதாலும் புதன் கிரஹ தோஷங்கள் நிவர்த்தியாகும்.

**புதனுக்கு உரித்தானவை :**

| | | |
|---|---|---|
| ராசி | : | மிதுன, கன்னி ராசிக்கதிபதி |
| திக்கு | : | வடகிழக்கு |
| அதிதேவதை | : | விஷ்ணு |
| ப்ரத்யதிதேவதை | : | நாராயணன் |
| ஸ்தலம் | : | மதுரை |
| நிறம் | : | வெளிர்ப் பச்சை |
| வாகனம் | : | குதிரை |

**புதனுக்கு உகந்தவை**

| | | |
|---|---|---|
| தானியம் | : | பச்சைப்பயறு |
| மலர் | : | வெண் காந்தள் |
| வஸ்திரம் | : | பச்சை நிற ஆடை |
| இரத்தினம் | : | மரகதம் |
| நிவேதனம் | : | பாசிப்பருப்பு பொடி அன்னம் |
| சமித்து | : | நாயுருவி |
| உலோகம் | : | பித்தளை |

## குரு

*வியாழ பகவான் தேவர்களின் குருவானவரால் குரு பகவான் என்றும் நுண்ணறிவு மிகவும் படைத்து கல்வி கேள்விகளில் சிறந்து விளங்குவதால் பிரகஸ்பதி பகவான் என்றும் அழைக்கப்படுகிறுர்.*

*குரு பகவான் ஆங்கீரச முனிவருக்கும் வசுதா என்பாளுக்கும் பிறந்த பிள்ளைகளில் ஏழாவது பிள்ளை தேவர்களின் குருவாகத் திகழ்பவர் இந்திரனுக்கு அமைச்சர்.*

*கிரஹங்களில் சுபக்கிரஹர். சாத்வீககுணம். மஞ்சள் நிறமுடையவர் பொன்னர் என்றும் வியாழன் என்றும் அழைக்கப்படக் கூடியவர். தர்ம சிந்தை கொண்டவர்.*

இவருக்கு தாரை, சங்கினி என்ற மனைவியரும், பாரத்துவாசர், யமகண்டன், கசன் என்ற புத்திரர்களும் உண்டு. தன்னை வழிபடுவோர்க்கு, மற்றவரை வணங்காத உயர் பதவியும் மதம், நீதி மனமகிழ்ச்சி புத்திரப்பேறு, செல்வம் முதலியவற்றை ஈபவர்

தக்ஷிணாமூர்த்திக்கு அர்ச்சனை செய்து வருவதாலும் மஞ்சள் கரை வஸ்திரம் உடுப்பதாலும், புஷ்பராக மணியை அணிவதாலும் மஞ்சள் நிற வஸ்திர தானம் செய்வதாலும் கடலை தானியத்தைத் தானம் செய்வதாலும் குருவார விரதம் இருப்பதாலும் குருதோஷங்கள் நிவர்த்தியாகும்.

**குருவுக்கு உரித்தானவை :**

| | | |
|---|---|---|
| ராசி | : | தனுசு மீன ராசிகளுக்கு அதிபதி |
| திக்கு | : | வடக்கு |
| அதிதேவதை | : | பிரமன் |
| ப்ரத்யதிதேவதை | : | இந்திரன் |
| ஸ்தலம் | : | திருச்செந்தூர் |
| நிறம் | : | மஞ்சள் |
| வாகனம் | : | மீனம் |

**குருவுக்கு உகந்தவை**

| | | |
|---|---|---|
| தானியம் | : | கடலை |
| மலர் | : | வெண் முல்லை |
| வஸ்திரம் | : | மஞ்சள் நிற ஆடை |
| இரத்தினம் | : | புஷ்பராகம் |
| நிவேதனம் | : | கடலைப் பொடி அன்னம் |
| சமித்து | : | அரசஞ்சமித்து |
| உலோகம் | : | தங்கம் |

## சுக்கிரன்

அசுரர்களுக்குக் குருவாக விளங்குபவர் சுக்கிர பகவான் இவர் பிரம்ம தேவரின் மானச புத்திரர்களில் ஒருவரான பிறகு முனிவருக்கும், புலோமசை என்பாளுக்கும் மகனாகப் பிறந்தவர்

இவர் வெண்மையான நிறமுடையவர். அதனால் இவருக்குச் சுக்கிரன் என்றும் வெள்ளி என்றும் பெயர்கள்.

இவரைப் பார்க்கவர், சுக்ராச்சாரியார், மூர்க்கர், சூரர், வாழ வைப்பவர், மழைக்கடவுள், கவிதை வழங்கும் வள்ளல், பொன்னையும் பொருளையும், வாரி இறைத்து தமது வள்ளல் தன்மையை நிரூபிப்பவர் என்றெல்லாம் கூறுவர். வானவரும் போற்றும் பெருமை கொண்டவர். இறந்தவர்களையும் உயிர்ப்பிக்கும் அளவற்ற ஆற்றல் கொண்டவர். இவரை வணங்கினால் இகத்திலும் பரத்திலும் இன்பமுறுவர் மாந்தர் என நூல்கள் பகரும்.

மகாபலிச் சக்ரவர்த்தியிடம் திருமால் வாமனராக வந்து மூன்றடி மண் கேட்ட போது, சுக்கிராச்சாரியார் அவ்வாறு மூன்றடி மண் கொடுக்க வேண்டாம் எனத்தடுக்க, மகாபலி அதைக் கேளாமல் நீர் வார்த்துக் கொடுக்க முனைந்த போது நீர் வார்க்கும் கெண்டியின் மூக்கினுள் சுக்கிரர் வண்டாக உருவெடுத்து நீர் வராமல் அடைத்துக் கொள்ள, அது கண்ட மகாபலி தம் பவித்ரத்தை மூக்கினுள் செருக, அது சுக்கிரனின் ஒரு கண்ணில் குத்த அதனால் சுக்கிரன் ஒரு கண் இழந்தவரானார்

சுக்கிர பகவான் அழகானவர். கலா ரசிகர். சகலகலா வல்லவர். சிறந்த கவிஞர், சுக்ர சாஸ்த்ரம் என்ற நீதி சாஸ்த்ரம் யாத்தவர், மழைக்கு அதிகாரி.

இவருக்கு சுபகீர்த்தி, கசுரி, சிருங்கினி என்பவர்கள் மனைவியர், விஷ கடிகை என்பவன் புத்திரன், தேவயானி

புத்ரி, இவர் தன்னை வணங்குபவர்களுக்கு நன்மதிப்பையும் அதிர்ஷ்டத்தையும் சுக போகத்தையும் அளிப்பவர்.

இராஜ இராஜேஸ்வரியை பூசித்து வருவதாலும் வைரக்கல்லை தரித்துக் கொள்வதாலும் வெள்ளை நிற வஸ்திரத்தையும் வெள்ளியையும் மொச்சை தானியத்தையும் தானம் கொடுப்பதாலும் சுக்கிர வார விரதம் இருப்பதாலும் சுக்கிர தோஷங்கள் நிவர்த்தியாகும்.

**சுக்ரனுக்கு உரித்தானவை :**

| | | |
|---|---|---|
| ராசி | : | ரிஷப, துலா ராசிகளுக்கு அதிபதி |
| திக்கு | : | கிழக்கு |
| அதிதேவதை | : | இந்திராணி |
| ப்ரத்யதி தேவதை | : | இந்திர மருத்துவன் |
| ஸ்தலம் | : | ஸ்ரீரங்கம் |
| நிறம் | : | வெண்மை |
| வாகனம் | : | முதலை |

**சுக்ரனுக்கு உகந்தவை**

| | | |
|---|---|---|
| தானியம் | : | மொச்சை |
| மலர் | : | வெண் தாமரை |
| வஸ்திரம் | : | வெள்ளை நிற ஆடை |
| இரத்தினம் | : | வைரம் |
| நிவேதனம் | : | மொச்சைப்பொடி அன்னம் |
| சமித்து | : | அத்தி |
| உலோகம் | : | வெள்ளி |

## சனி பகவான்

சனி பகவான் சூரியனுக்கும் சாயா தேவிக்கும் மகனாகப் பிறந்தவர். தாமஸ குணமுள்ளவர். கரிய

நிறமுள்ளவர். இவருக்குக் காரி என்று பெயர் வழங்குகிறது. இவரது கால் ஊனமானபடியால் மெதுவாக நடந்து செல்லும் இயல்புடையவர். மெதுவாக நடப்பதனால் இவருக்கு சனைச்சரன் என்றும் மந்தன் என்ற பெயருமுண்டு.

இவருக்கு நீளாதேவி, மந்தாதேவி, சேஷ்டா தேவி என்ற மூன்று மனைவியர் ; குளிகன் என்பவன் புத்திரன். இவர் ஆயுள்காரகர், மற்றும் இரும்பு, எண்ணெய், கருப்புத் தானியம், பூமியில் புதைத்த புதையல் முதலியவற்றுக்கும் காரகர். அவரவர் ஜாதக பலாபலன்படி வறுமை, கலகம், நோய், அவமதிப்பு ஆகியவற்றை உண்டாக்குபவர்.

ஒருவருடைய ஜாதகத்தில் இவர் நல்ல இடத்தில் தங்கி வலுவும் பெற்றிருப்பாரானால் அளவற்ற நலன்களை வாரி வழங்குவார். இவர் பனிரெண்டு ராசிகளையும் ஒரு முறை சுற்றி வருவதற்கு முப்பது ஆண்டு காலமாகும். எனவே 30 ஆண்டுக் காலத்தில் இவர் பிடியில் அகப்படாதவர் யாருமில்லை. அதனாலேயே முப்பது ஆண்டு வாழ்ந்தவனும் இல்லை. முப்பது ஆண்டு கெட்டவனும் இல்லை என்று சொல்கிறார்கள்.

சனி பகவான் சூரிய புத்திரர் என்பதால் சூரியனின் தன்மைகளைப் பெறுகிறார்.

'குல விச்சை கல்லாமல், பாகம் படும் ; அது போல் தந்தையறிவில் மகனுக்குப் பாதிவரும் என்பது வேத முடிவு இதற்குக் காரியே சான்று.

ஆஞ்சநேயரைச் சனிக்கிழமைகளில் வழிபட்டு வருவதாலும், நீலக்கடலைத் தரித்துக் கொள்வதாலும், கருப்பு நிற வஸ்திரத்தையும் எள்ளையும் தானம் கொடுப்பதாலும், சனிக்கிழமைகளில் எள் எண்ணெய்த் தீபமிட்டுச் சனி பகவானுக்கு அர்ச்சனை செய்வதாலும் சனிக்கிரஹ தோஷங்கள் நிவர்த்தியாகும்.

### *சனிக்கு உரித்தானவை :*

| | | |
|---|---|---|
| ராசி | : | மகர கும்ப ராசிகளுக்கு அதிபதி |
| திக்கு | : | மேற்கு |
| அதிதேவதை | : | இயமன் |
| ப்ரத்யதிதேவதை | : | பிரஜாபதி |
| ஸ்தலம் | : | திருநள்ளாறு |
| நிறம் | : | கருமை |
| வாகனம் | : | நாகம் |

### *சனிக்கு உகந்தவை*

| | | |
|---|---|---|
| தானியம் | : | எள்ளு |
| மலர் | : | கருங்குவளை |
| வஸ்திரம் | : | கருப்பு நிற ஆடை |
| இரத்தினம் | : | நீல மணி |
| நிவேதனம் | : | எள்ளுப்பொடி அன்னம் |
| சமித்து | : | வன்னிச் சமித்து |
| உலோகம் | : | இரும்பு |
| தீபம் | : | எள்ளு முடிச்சு இட்ட எள் எண்ணெய்த் தீபம் |

**சூரியன்சோ மன்செவ்வாய் சொற்புதன் வியாழன் வெள்ளி**
**காரியன் இராகு கேது கடவுள் ரொன்பானாமத்**
**தாருயச் சக்கரத்தைத் தரித்திரர் பூசித்தாலும்**
**பாரினிற் புத்திரருண்டாம் பாக்கியம் நல்குந்தாமே.**



# எவளிவந்துவிட்டது

# நவக்கிரஹ ஜோதிடம் A to Z

கால புருஷனின் கணக்குப்படி நம் தலையெழத்தை நிர்ணயிப்பவை நவக்கிரகங்கள். கோடீஸ்வரனை பிச்சைக்காரனாக்குவதும், ஏழையை குபேரனாக்குவதும் நவக்கிரகங்களின் திருவிளையாடல்கள் தான்.

- அப்படிப்பட்ட நவக்கிரகங்கள், புராணப்படி, எண்கணிதப்படி, கோச்சாரப்படி, தசைப்படி, அஷ்டகவர்க்கப்படி, நிற்கும் ஸ்தானப்படி என்னென்னவெல்லாம் செய்யும் என்பதை எளிய முறையில் விளக்குவதே இப்புத்தகம்.
- இது மட்டுமா தாராபலன், சந்திரபலன், ஓரைபலன், ஒன்றெடொன்று இணையும் கிரகபலன், ஒன்றை ஒன்று முட்டிக்கொள்ளும் கிரக பலனையும் அலசி ஆராய்ந்து தருகிறது. நவக்கிரக ஜோதிடம் A to Z
- சாத்தியமல்லாததை நவக்கிரக துணை கொண்டு எளிதில் சாத்தியமாக்க வல்லது இப்புத்தகம்.
- நவக்கிரக ஜோதிடம் A to Z 5 பாகத்தையும் படித்து முடிக்கும் ஒருவன் நவக்கிரகம் போடும் முடிச்சுகளை சூட்சுமம் அறிந்து சுலபமாக அவிழ்த்து, வாழ்க்கையில் வெற்றி காண இயலும்.

ஆட்டிப்படைக்கும் ஆதித்யாதி நவக்கிரகங்களை அலசி
ஆழம் பார்க்கிறார் ஜோதிட சாஸ்திர வித்தகர் **சர்மா**

**V.P.P. யில் 5 பாகமும் பெற ரூபாய். 550/- ஆகும்.**

ஒவ்வொரு பாகமும் தனித்தனியாக பெற ரூபாய். 25/- ஒவ்வொரு பாகத்திற்க்கும் கூடுதல் தபால் செலவாகும்.

**5 பாகமும் ஒன்றாக பெற்றால் தபால் செலவு குறையும்**

V.P.P. ல் பெற எழுதுங்கள்




## விஜய் பப்ளிகேஷன்ஸ்

A-3, வந்தியன் மாளிகை, எண். 70, எல்லையம்மன் கோயில் தெரு, மேற்கு மாம்பலம், சென்னை – 600 033.

V.P.P. ல் பெற 044-2489 7825 எண்ணிற்கு போன் செய்யுங்கள்
அல்லது 98410 91353 என்ற எண்ணுக்கு S.M.S. செய்யுங்கள்